# ஆபாச போஸ்டர் சத்தியாக்கிரகம்



நெரூர் எஸ். சிவசுப்பிரமணியம் எம். ஏ.



சர்வோதயப்பிரசுரம்

# ஆபாச போஸ்டர் சத்தியாக்கிரகம்



மூலம் : ஹிந்தி
ஸ்ரீ சுரேஷ் ராம்



மொழிபெயர்ப்பு :
நெ. சு. சிவசுப்பிரமணியம் எம்.ஏ.,



**சர்வோதய பிரசுராலயம்,**
தலைமைக் காரியாலயம் :
(அகில பாரத சர்வ சேவா சங்கம், காசி)
**தஞ்சாவூர்.**
1963

முதல் பதிப்பு :
ஏப்ரல் 1963 — 2000

விலை 75 காசு Price 75 Np.

APASA POSTER
SATYAGRAHAM

Translated by :
N. S. SIVASUBRAMANIAM

From Hindi Book
"POSTER ANDOLAN"
by SURESH RAM

Published by :
Gita Prakasan, Allahabad

SARVODAYA PRACHURALAYAM,
THANJAVUR.
(Southern Branch of Akhila Bharath
Sarva Seva Sangh Prakashan, Kashi.)



Rainbow Printers,
Tiruchirappalli-8.

# பதிப்புரை

ஆச்சார்ய விநோபாஜி நடத்திவரும் அஹிம்சா புரட்சியில் ஆபாச சினிமா போஸ்டர் சத்தியாக்கிரகம் பிரசித்தமானது. 1960-ல் இந்தூரில் விநோபாஜி ஒரு மாதம் தங்கியபொழுது பெண்குலத்திற்கே அவமானம் விளைவிப்பதுடன், வரும் சந்ததியான சிறுவர்களின் புத்தியைக் கெடுக்கும் மானக்கேடான ஆபாச சினிமா போஸ்டர்களை எதிர்த்து தீவிர பிரசாரம் செய்தார்; இயக்கம் நடத்தினர்; இறுதியில் சத்தியாக்கிரகம் செய்யவும் சர்வோதய ஊழியர்களுக்கு அனுமதி அளித்தார்.

இந்த இயக்கம் தேசத்தில் எங்கும் பரவியது. நாகரீக உலகத்திலே மனச்சாட்சியைத் தூண்டிற்று; எதிர்ப்பும் கண்டனமும் உருவானது; சினிமா உற்பத்தியாளர்களிடை அதிர்ச்சி ஏற்பட்டது. அரசாங்கமும் சட்டரீதியாக கவனம் செலுத்தத் தொடங்கியது.

இந்த மகத்துவமான இயக்கத்தின் ஆதாரக் கருத்துக்களையும் சத்தியாக்கிரகத்தையும்பற்றி ஸ்ரீ சுரேஷ்ராம் எழுதிய ஹிந்தி நூலை அலகாபாத் கீதா ப்ரகாசன் வெளியிட்டது. இதன் தமிழ் மொழிபெயர்ப்பை சர்வோதய அன்பர் நெரூர் சிவசுப்பிரமணியம் முன்னமே தயாரித்துவிட்டதைத் தாமதமாக வெளியிடுகிறோம். இந்த பிரச்னை தீரும்வரையில் இந்த இயக்கம் தொடர்ந்து இருந்துவருவது உறுதி. தமிழ்நாட்டினர் இதை வரவேற்று ஆபாச சினிமா போஸ்டர்களே இல்லாதபடி கண்காணிப்புடன் இடைவிடாது கண்டித்தும் எதிர்த்தும் வருவதற்கு இது தூண்டுதல் அளிக்கும் என்ற நம்பிக்கையில் இதை வெளியிடுகிறோம்.

ஸ்ரீ சுரேஷ்ராம் அவர்களுக்கும் மொழிபெயர்த்து உதவிய திரு. நெரூர் சிவசுப்பிரமணியம் அவர்களுக்கும் எமது நன்றி உரித்தாகுக.

தஞ்சாவூர்,
ஏப்ரல், 63

**சர்வோதய பிரசுராலயம்.**

## பொருளடக்கம்





# முகவுரை

சிருஷ்டியின் சிகரமாக மனிதன் அமைவது அவன் சீலத்தால். அவன் பகுத்தறிவு பெற்றிருக்கின்றான். அதில்லாத விலங்குகளும் பறவைகளும் உணர்ச்சி களால் ஐக்யப்படுபவை, அவைகளால் மகிழ்பவை. மனிதன் தன் பகுத்தறிவைக்கொண்டு அவற்றினும் உயர்ந்தெழுகின்றான். அவன் வாழ்க்கையை முறை படுத்துகின்றான், அதனாலேயே அவனுக்கு உயர்வு. பண்டையிலிருந்து மனிதன் தன்னை முறைபடுத்திக் கொள்வதையே நாம் பண்பாடு, ஒழுக்கம், சீலம் என்று பலவாகச் சொல்லுகின்றோம். அவன் இந்த முறை படுத்துதலை செய்துகொண்டே வருகின்றான். அவ னுக்கு மேம்படுதலில் ஆசையுண்டு.

மேம்படும் ஆசை அவனை இரு வழிகளில் ஊக்கு கின்றது. அவரவர் அறிவின் வழி அவரவர் செல்கின் றனர். சிலர் உணர்ச்சிகளுக்கு போக்குக் கொடுத்து அதனால் சுகம் பெறுதலே மேம்பாடு என்று கொள்கின் றனர். அவர்கள் வாழ்க்கையை குறுகிய அளவில் அறிந்துகொண்டு உண்டுடுத்து உறங்குவதையே சுகம் எனக் கொள்கின்றனர். அதிகமாக பண்டங்களைத் துய்த்து அதிக சுகம் பெறலாம் என்று கொள்கின்றனர். சுகம் பெறும் ஆசை தேவைகளைப் பெருக்கவே செய் கின்றது. தன் தேவைகளைப் பெற மனிதன் மிருகங் களின் வழி வர வேண்டியதாகின்றது. சுகபோக வசதி களைப் பெருக்குவதையும் துய்ப்பதையும் மேம்பாடு என்று கொள்ளும் சிந்தனைதான் உலகாயத வாதம்.

அது வாழ்க்கைக்கு வரம்புகளை விதிப்பதில்லை, கட்டுப்பாடுகளுமில்லை. உணர்ச்சிகளைப் பாராட்டும் மனது அதற்கு அநுகூலமாக அமைந்துவிடுகின்றது. அது அறிவிற்கன்றி உணர்ச்சிக்கே துணை நிற்பதாகின்றது. ஆயின் இறுதியில் மனிதன் நாடும் சுகத்தை அவனுக்குக் கொடுக்காமல் கலவரத்தையே கொடுக்கின்றது. உலகாயதம், மிருகங்களின் புன்மைப் பகுதிகளை அவன் பெறவும் கையாளவுமே அவனை ஊக்குகின்றது. அறிவு பெற்ற மனிதன் விலங்குகளைப்போலவும் அவைகளுக்கும் அதிகமாகவும், பொறாமை, பேராசை, வஞ்சனை, போட்டி, களவு, பகை, போராட்டம் இவைகளைப் பெற்றவனாக உள்ளதாலேயே உலகில் அமைதியும் அன்பும் இல்லாமல் எல்லாம் கலவரமாய் உள்ளது.

இதற்கு மாறாயது பகுத்தறிவு வழி, சீல வாழ்க்கை. மனது ஆசைகளைத் தூண்டுகின்றது. அதை அதன் வழி விட்டால் எவ்வளவிற்கும் விரிகின்றது. மனதை அடக்கி ஆசையை ஒடுக்கினால் புறப்பண்டங்களினின்று பெறும் சுகத்தினும் அதிகச் சுகம் பெறலாம் என்பது அறிவின் போதம். புறப் பண்டங்களினின்றும் அவைகளை துய்ப்பதினின்றும் பெறும் சுகத்தைவிட அதிக சுகத்தை நாம் மனதை அடக்கி முறைபடுத்துவதாலும் அவ்வழி செயல்படுவதாலும் பெறலாம் என்று அறிவு நமக்கு விளக்குகின்றது. இதுவே ஒழுக்கத்துடன் வாழும் வழி. வாழ்க்கைக்கும் செயல்களுக்கும் வரம்புகளைக் கட்டவேண்டுவதை இவ்வழி வற்புறுத்துகின்றது. மனிதன் உடல்பெற்றவன், அவனும் இயற்கையின் பகுதி, அதனால் இயற்கைத் தேவைகளையும் உணர்ச்சிகளையும் பெற்றவன். ஆனால் அவன் விலங்குகளைப் போலன்றி தன்னைத்தானே கட்டுப்படுத்திக்கொண்டு வாழ்கின்றான். ஒழுக்கத்துடன் வாழ்வது இம்முறையில் தான். அவனுக்கு உணர்ச்சிகள் அன்றி அறிவே

வாழ்க்கை நெறியைக் காட்டுகின்றது. அவன் தேவைகளை முறைபடுத்தவும் அளவில் வைக்கவும் செய்வது கூடுகின்றது. ஒரு புலி தன் பசியை ஆற்றப் பெரும் யானை ஒன்றைக் கொன்று அதன் சிறு பகுதியை உண்டு மற்றதை வாளாவிட்டுச் செல்கின்றது. அதில் கொலையும் வீணும் இருப்பதைப்போன்றல்ல, மனிதன் பசியை சிற்றளவிலும், நிறைச்சுவையிலும் வைக்கும் ஆற்றல் பெற்றிருக்கின்முன். விலங்குகளில் புணர்ச்சி வரம்பற்று நடைபெற, மனிதன் அதை முறைபடுத்தி இல்லறமாக்கி சமுதாயத்தை வளர்க்கின்முன்.

அதேபோன்று பிறவாசைகளையும் முறைபடுத்தி அவைகளை ஒடுக்கலாம். செயல்களும் ஒழுங்குபட்டு தனக்கும் பிறருக்கும் தீமை பயக்காது செல்லும். ஆயின் இவ்வழி செல்ல அறிவும் உறுதியும் பேரளவில் வேண்டும். அறிவு மிகுந்து தன்னடக்கம் வரும்பொழுது உணர்ச்சிகள் வழி மனம் போகாது அது ஊக்கும் வழி உணர்ச்சிகள் செல்வதாகும். அப்பொழுதே தனியொருவனும் அவன் கூட்டமும் மனித சமுதாயமும்— நேரியதாகவும் நிறைவாகவும் வாழ்ந்து முடித்தல் கூடும். அது உண்மை மேம்பாடு. அதை நாடி முயன்ற ஆன்ருேர் நமக்கு வழிகாட்டிகளாகவும் அமைந்துள்ளார்கள். அந்த நேரிய வழியை விளக்குபவர்கள் இன்றும் உள்ளார்கள். ஆயின் அவர்கள் வழி ஒழுகும்பொழுது நாம் பயன் பெறுகின்ருேம்.

இவ்வழியை ஏற்ருல் அது துறவேயாகிவிடும் என்று கொள்ள வேண்டியதில்லை. உதிர்சருகு கந்த மூலங்களை உண்டு இயற்கைத் தேவைகளை பூர்த்தி செய்வோரும் நீரில் மூழ்கியும் கனலில் காய்ந்தும் கடுந்தவம் செய்வோருமாக அனைவரும் நிற்க வேண்டியதுமில்லை. பகுத்தறிவைப் பெற்றவன் மனிதன் என்ற உயர்வை அடைய தன்னடக்கம் நிறைந்தவனுகக்

கொண்டால் அவன் புறத்திருந்து நாடும் சுகத்தினும் அகத்திருந்தே அதிக சுகத்தை பெற்று நிறைந்தவனு கின்றான்.

மனித உடலிற்கு — மனிதனுக்குப் பாலுணர்ச்சி உண்டு, அது பசி உணர்ச்சியினும் வலிவு பெற்றது என்பதை மறுப்பதற்கில்லை. ஆயினும் அது கட்டுப் படாததன்று. மனிதன் அறிவு பாலுணர்ச்சியை முறை படுத்திக்கொள்ள வல்லது என்பதே இன்று சமுதாயம் ஓரளவில் அமைவதற்குச் சான்றாகின்றது. மனிதன் தாய்வயிற்றுப் பிறந்து சகோதரிகளுடன் வாழ்கின்றான். பிறகு மனைவியைப் பெற்று மக்களை ஈன்றுகின்றான். அவன் இவர்களுடன் தான் பழகுவதெப்படி என்பதை முறைபடுத்தி வைத்துள்ளான். மனிதன் இவ்வழி நேராக நடப்பதையே அனைவரும் பாராட்டி நிற்கின்ற னர். இராமபிரான் இந்தப் பிறவிக்கு இருமாதரை சிந்தையாலும் தொடேன் என்ற ஒழுக்கத்தின் உதாரண மாக நிற்பதை பாராட்டாதார் யார்?

இயற்கை ஆணிற்கும் பெண்ணிற்கும் பரஸ்பர கவர்ச்சி சக்தியை கொடுத்துள்ளது. ஆனாலும் அதை முறைபடுத்துவதே மனிதனின் சிறப்பை எடுத்துக் காட்டுகின்றது. ஆகையால் ஒழுக்கத்தைக் குலைக்க கவர்ச்சிக்கும் வலிவில்லை. அவன் அதை இயற்கையின் வனப்பாகவும் அழகாகவும் கொண்டு ஆனந்தப்படு கின்றான்.

இன்று உலகாயத உலகில் கலாவிநோதங்கள் விசேஷ சிறப்பைப் பெருகின்றன. பண்டையிலும் அவையுண்டு, அவை ஓரளவிற்கு வேண்டப்படுப வையே. ஆயின் அவை கலையளவையும் விநோத அள வையும் கடந்து ஆபாச அளவில் அமரும் பொழுது அதற்கு பாராட்டு உரியதா என்ற சந்தேகம் எழுகின் றது. இன்றைய கேளிக்கையும் விநோதமும் பாலு

ணர்ச்சியை தட்டி எழுப்பி வளர்க்க உதவுவனவாயின் அவைகளை நாம் பாராட்டுவதற்கில்லை. ஆபாசத்தை யாரும் ஏற்க முன்வரமாட்டார்கள்.

இன்று பண்டங்களைப் பேரளவில் உற்பத்தி செய்வதிலும் அவைகளை விற்பதிலும் அக்கறை கொள்ளப்படுகின்றது. விற்பனைக்குச் சாதகமாக விளம்பரம் அமைகின்றது. விளம்பர சாதனங்களோ பலவாக உள்ளன. ஒலியும், ஒளியும் விளம்பர சாதனங்கள். கண்ணைக் கவரும் பெரிய படங்கள், காதைத் துளைக்கும் கோஷங்கள். இசையும் அலங்காரமும் இவ்வழி இழிக்கப்படுவது விரும்பத்தக்கதல்ல. பெரிய எழுத்துக்கள், வர்ணப் படங்கள், கவரும் பெண்ணுருவங்கள், ஆபாச நிலையில் ஆடவர் பெண்டிர் படங்கள், இவையே ஓவியம்.

நாடகம் ஓரிடத்தும் ஒரு அவைக்கும் நடிக்கப்படுவது. ஆயின் இன்று விஞ்ஞானத்தின் உதவியால் ஒருதரம் நடிக்கும்பொழுது ஒளியையும் ஒலியையும் பதிவு செய்து அதனின்றும் பல பிரதிகளை யெடுத்து பல இடங்களில் திரைமீது அப்படங்களைக் காட்டலாம். அந்த ஒலியையே ஒலிக்கவும் செய்யலாம். இந்த விஞ்ஞான சாதனத்தால் மக்கள் களிப்பெய்துவது ஒருபுறமிருக்க அதைத் தயாரிக்கும் முதலாளிகள் தம் இலாபத்தைப் பெருக்கவும், அதை மேலும் மேலும் ஜனத்திரள் பார்த்துப்போகவும் பல வகைகளில் விளம்பரம் செய்கின்றார்கள். படம் பார்க்கக் கட்டணம், ஆயின் இலவசமாக கோஷங்கள் காதைத் துளைக்கவும், கண்களை சுவரொட்டிப் படங்கள் குருடாக்கவும் பல விளம்பர சாதனங்கள். எமனைத் தப்பினாலும் இந்த விளம்பர சுவரொட்டிப் படங்களை யாரும் எங்கும் தப்ப முடியாது. அப்படங்களோ மக்களைக் கவரும் வகையில் ஆடவரையும் பெண்டிரையும் ஆபாச நிலையில் சித்தரிக்கின்றன. குக்கிராமங்களிலேயே சுவரொட்டிகள்

வெள்ளைச் சுவர்களை பாழடிக்கின்றன, நகர்ப்புறங்களில் ஒரு அங்குலச் சுவரும் வெள்ளையாய் இருப்பதில்லை. உலோபிகளையும் தவசிகளையும் மனங் கரைய வைக்கும் படங்களே மக்களைப் படங்களைப் பார்க்க வாருங்கள் என்று கூவி அழைப்பன போல் அமர்கின்றன. யாருக்கு இதனால் இலாப முண்டாகட்டும், யாருக்கு நஷ்ட முண்டாகட்டும், சமுதாயத்தில் சீலம் தேய்ந்து படுகின்றது உலகையறியா இளைஞர்கள் இவைகளைக் கண்டு மயங்கி பாலுணர்ச்சி மிகுபவர்களாய் ஒழுக்கத்தை கைவிட முனைகின்றார்கள். ஒழுக்கமில்லா உயர் வாழ்க்கை, நிலைப்படுவதாவது ? மேம்படுவதாவது ?

வெறும் அரசியல் வாதியன்று மகாத்மா காந்தி. அவர் அரசியல் சுதந்திரத்தை மக்களைச் சீல வழியில் அமர்த்துவதற்கு உதவும் சாதனமாகக் கொண்டார். அவர் மேற்கொண்ட நிர்மாண வேலைகளும், அவர் போதங்களும் சீல வாழ்க்கையையே வற்புறுத்துவன. அவர் சீடர் வினோபாவடிகளும் அத்தகையவரே. அவர் அடிச் சுவட்டிலேயே நடந்து செல்கின்றார். காந்தியடிகள் மறைவிற்குப் பிறகு அவரது சீடர்கள் பலர் அதிகார மோகத்தால் கவரப்பட்டு அரசியலைப் பற்றி நிற்க அவர் அரசியலை முற்றுமாகத் துறந்து மக்களின் சீலத்தை வளர்த்துவதிலேயே அக்கரை கொள்கின்றார். சர்வோதய இலட்சியமே அது. சீலம் மிகும் சமுதாயத்திற்கு அரசியல் வேண்டியதில்லை. அடக்கமும் முறையும் நிறைய, பிறரை அடக்க ஆட்சியும் தண்டனைகளும் தேவைப்படுமா ? அவர் பெரிய பிரச்னைகளையும் மனிதனின் நல்லியல்பை ஊக்கித் தீர்க்க வேண்டுமென்று கொள்பவர். உலகைத் துகளாக்கும் பொருளாதாரப் பிரச்னையை அவர் மனிதனின் கருணையையும் நியாய உணர்ச்சியையும் தூண்டி பூதானம், பொருள் தானம் என்று பல தானங்களால் சமுதாயத்தை சமநிலையில்

அமர்த்த முயல்கின்றார். பத்தாண்டுகளுக்கு மேலாக நாடு முழுதையும் மூலே முடுக்குகள் விடாமல் சுற்றி தன் அறநெறியை மக்களுக்கு விளக்கி வருகின்றார். அவர் நகர்ப் புறங்களில் அரிதாக நுழைகின்றார். காஷ்மீரம் சென்று தெற்கு நோக்கி வரும்பொழுது ஒரு மாத காலம் இந்தூரில் தங்க அவருக்குச் சந்தர்ப்பம் உண் டாயிற்று. அவர் நகரத்தின் பல பகுதிகளுக்கும் சென்று தங்கினர். பல தெருக்கள் வழியாகவும் சென்றார். அவர் சுவற்றைப் பார்க்கும்பொழுது இத்தீய சுவரொட்டிகள் அவர் கண்களைத் தாக்கின. அதற்கு முன்பு அவை களை அவர் கூர்ந்து பார்த்ததில்லை. அவர் மனம் கரைய ஆரம்பித்தது. ஆபாசத்தை தவசியாகும் அவராலும் சகிக்கக் கூடவில்லை. தெருக்களில் பெண்கள் தலை யெடுத்துப் போகாதபடி அமையும் அவைகளை அகற்று வது தன் முதற்பணி என்று சுவரொட்டி அகற்றும் இயக்கத்தைத் துவக்கினர். அது வெற்றி பெற்றுவிட் டது என்றே சொல்லலாம். பட முதலாளிகளும் வரம்புகளையும் தணிக்கைகளையும் ஏற்படுத்திக்கொள்ள சம்மதிக்கின்றனர். அரசாங்கமும் ஆவன சட்டங்களைச் செய்ய முன்வருகின்றது. ஆபாசம் சுவரொட்டியிலோ, இசையிலோ, இலக்கியத்திலோ இனி நிலைபெறாது மறைந்தே செல்லும்.

ஸ்ரீ சுரேஷ் ராமபாய் என்பவர் உத்திரதேசத்தில் அரிய தொண்டாற்றும் தொண்டர். அடிகளுடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் பெற்றவர். அடிகளின் இயக்கங்களில் தன் பங்கை விடாது ஆற்றுபவர். அவர் அடிகளைப் பற்றியும் சர்வோதய பூதான இயக்கங் களைப் பற்றியும் அரிய நூல்கள் பலவற்றை ஆங்கிலத் திலும், இந்தியிலும் எழுதி வெளியிட்டுள்ளார், அவர் சமீபத்தில் "போஸ்டர் ஆந்தோலன்" (சுவரொட்டி இயக்கம்) என்னும் சிறு நூலை இந்தியில் எழுதியுள்ளார்.

அதன் சுருக்கமே இது. தமிழ்நாட்டில் சுவரொட்டி அகற்றும் இயக்கம் பெருகாவிட்டாலும் மக்கள் சர்வோதய நோக்கை முற்றுமாக அறிந்துகொள்ள இதுவும் பயன்படும் என்று கொண்டே இது தமிழில் வெளி வருகின்றது.

இதை அச்சிட்டு தமிழ் நாட்டு மக்களுக்கு விநியோகிக்கும் பொறுப்பை சர்வோதய பிரசுராலயத்தார் மேற்கொண்டதற்கு என்னுடைய நன்றி.

16—7—61
நெரூர்.

நெ. சு. சிவசுப்பிரமணியன்.

# ஆபாச போஸ்டர் சத்தியாக்ரகம்

## முதல் அத்தியாயம்

## நாட்டின் இழிய நிலை

*விழிப்பு பெற்றவர்களுக்கு சுயராஜ்யம் உரியது. தூங்கி வழிபவர்களுக்கு அது வேண்டப்படுவதன்று. சிலரே ஆயினும் அவர்கள் திடசங்கற்பம் பெற்றவர்களானல், தங்கள் இலட்சியத்தில் பற்றுள்ளவர்களானல் அவர்கள் சரிதத்தின் போக்கையே மாற்றிவிடக்கூடும்:* —**மகாத்மா காந்தி.**

இன்று நம் நாட்டின் நிலை அவலமாயிருக்கின்றது. சுயராஜ்யம் பெற்ருேம், ஆயின் நாடு துண்டிக்கப் பட்டுள்ளது. அதன வழி இன்றும் தீராத அகதி பிரச்னை தோன்றியுள்ளது. நாட்டின் வறுமை அகன்ற பாடில்லை. சமய சாதி சண்டைகள் இன்றும் ஓயவில்லை. அயல் நாடாகும் சீன நம் நட்பைப் பாராட்டாது நம் எல்லையைக் கவர்ந்து நிற்கின்றது. நம் அரசியல் வாதங்களும் கட்சிகளும் பலவாகி மக்களைப் பிளவு பட்ட வர்களாக நிற்கச் செய்கின்றன. இந்தியராகிய நாம் ஒற்றுமை யுணர்ச்சியின்றி எல்லை உணர்ச்சி மிகுந்தவர் களாக அமர்கின்ருேம்.

இன்று சுதந்திரர்களாகிய நாம் நம் வாக்குகளை உபயோகித்து நாடாட்சி செய்பவர்களை நியமிக்கின் ருேம். நாமும் நம் அரசாங்கமும் ஒன்றே. முன்பு போல் அரசாங்கத்திடமிருந்து பிரிந்து நிற்கவேண்டிய தில்லை. நாமே நம்மை உயர்த்திக் கொள்ளவும் தாழ்த்திக்கொள்ளவும் உள்ளவர்கள். நாம் பல வாதங் களையும் ஆராய்தல் வேண்டும். ஆனல் ஒன்றைத் துணிந்து திட சங்கற்பத்துடன் முயன்றெழவேண்டும். இன்று விஞ்ஞான காலம். அதை நாம் புறக்கணிப்

பதற்கு இல்லை, ஆயின் நியாயத்தையும் சீலத்தையும் கைவிட்டுச் செல்வதற்குமில்லை. திரிசமங்களை நீத்து நேர்மையான விஞ்ஞான வழியில் நாம் செல்வது முறையாகும்.

விஞ்ஞானம் ஆக்க சக்தி பெற்றிருப்பதைப் போன்று அழிவு சக்தியையும் பெற்றிருக்கின்றது. விஞ்ஞானத்தைப் பயன்படுத்தி உலகையே அழித்துவிடலாம். உலகையே ஒரு குடும்பமாகக் கொண்டு உலகம் உய்யவழி செய்யலாம். உயர்தர வாழ்க்கை என்ற மோகம் நம்மைப்பற்றி இழுக்க நாம் நேர்வழி செல்ல முடியாது. பிணைபட்டது மனித சமுதாயம். நாம் சுகமாக வாழ விரும்பினுல் அனைவரும் அப்படி வாழ்வதாலுல் தான் கூடும். அது அனைவரும்கூடி பாடுபட்டால்தான் கைகூடுமென்பதை விஞ்ஞானமும் நமக்கு தெளிவாக்குகின்றது.

நேர்மை நியதி என்றுல் யாரும் திடுக்கிட்டு கலங்க வேண்டியதில்லை. நேர்மை துறவுமல்ல; சிலர் அடிமை பட்டும் துணிந்தும் வாழ்வது என்று கொள்கின்றுர்களே அதுவுமல்ல. நேர்மையைப் பெற இரண்டு குணங்கள் வேண்டும் : தூய்மை, கருணை. தூய்மையைப் பெற்றுல் தாஞகவே நேர்மை நம்மிடம் வந்துசேரும்.

முன்னேற்றத்திற்காக ஐந்தாண்டு திட்டங்கள் போடப்படுகின்றன. அதில் வாழ்க்கைத் தர உயர்வு வற்புறுத்தப்படும் அளவிற்கு சீரிய மனிதத்தன்மை வற்புறுத்தப்படுவதில்லை. அதனுலேதான் இவ்வளவு கலவரம் தோன்றுகின்றது. ஆனுலும் அதே காலத்து நீதியை வளர்த்த முயற்சியும் ஒரு வழி செய்யப்பட்டு வருகின்றது. அதுதான் 1951 ஏப்ரலில் தோன்றிய பூதான இயக்கம். உண்மை வெல்லும் என்பதைக் கண்ட விநோபாவடிகள் நாடு சுற்றி யாத்திரை செய்து வருகின்றுர். நிலமற்றவர்களுக்கு நிலம் கிடைக்கின்றது.

அவர்கள் நாணயமும் கௌரவ உணர்ச்சியும் பெற்று தங்கள் பிழைப்பைப் பெறுகின்றார்கள். பூதான இயக்கத்தில் நிலத்தைக் கொடுப்பதும் வாங்குவதும் மட்டுமல்ல. நேர்மையைப் பற்றி நிற்கத் தூண்டுவதே அவ்வியக்கம். இன்று சமுதாயத்திலுள்ள நியதிக் குறைவை அகற்றுவதே முதற்படி வேலையாகின்றது. சீலமின்மை எவ்வுருவிலமையினும் அதை அகற்றல் வேண்டும்.

ஜெர்மன் கவி கோதே அவர்கள் ஆங்கிலேயரைப் பற்றி பாராட்டிச்சொல்வதுஎன்னவென்றால் "அவர்கள் கடவுள் சிருஷ்டித்தபடி வாழ்கின்றார்கள். அது தான் அவர்கள் மேன்மைக்குக் காரணம்" நாம் நீண்டகாலம் பிறருக்கு அடிமைப்பட்டிருந்ததால் ஒருக்கால் நம் தனித்தன்மையை இழந்து விட்டோமோ? யாதாயினும் இன்று நாம் சுதந்திரர்கள் ஆகையால் நம் தனித் தன்மையுடன் வாழவேண்டும். சீலம் பெருகுமளவிற்கு மனிதனும் உயர்வான். அவன் நாடும் உயரவே செய்யும். ஆகையால் அதைக் காப்பது முதற் கடமை யாகின்றது.

இளைஞர்கள் சீலத்தைக் காப்பதிலும் அதைப்பற்றி நிற்றலிலும் அக்கறை கொள்ளவேண்டும். சிலர் மாணவர்களிடம் அடக்கம், ஒழுக்கம், தூய்மை, நன்னடக்கை இவைகளில்லை என்று குறை கூறுகின்றார்கள். ஆனால் உண்மையைச் சொல்லவேண்டுமானால் இளைஞர்கள் மேல் அவ்வழி குற்றம் சாட்டுவது பொருந்தாதென்றே சொல்லவேண்டும். பெரியோர்கள், அரசாங்கம், ஆட்சிமுறை இவைகளே ஒழுங்கீனத்திற்குக் காரணமாகக் கொள்ளப்படவெண்டும்.

## திட்டமும் வறுமையும்

அனைவருக்கும் உரிய சந்தர்ப்பம் அளிக்கப்பட வேண்டுவது அவசியம். ஆயினும் திட்டக் கமிஷனரே

"நம் நாட்டின் கிராம மக்களின் ஒரு பகுதியில் (அவர்களே எண்ணிக்கையில் பெருகியவர்கள்) .நிலமில்லாதவர்களும் சேருகின்றார்கள். பிறருக்கு உழைத்து வயிற்றுப் பிழைப்புப் பெறுகின்றார்கள். அதில் வேலையில்லாதவர்களின் எண்ணிக்கை சிறிதன்று. அவர்களின் வேலை யின்மை பெருகி அவர்கள் பிழைப்பற்றுள்ளார்கள்" என்று எழுதுகின்றார். இந்நிலையில் கூட்டுறவு விவசாயம் வறுமையைப் போக்குமென்று கொள்ளப்படுகின்றது. ஆயின் உண்மைக் கூட்டுறவிற்காகும் சூழ்நிலை உள்ளதா என்பதை ஆராயாமல் அம் முடிவிற்கு வருவது பொருத்தமானதன்று" பொருள் நூல் வல்லுநர் ஸ்ரீ ஞான சந்து என்பவர் "இன்றுள்ள நிலை கலவரமாயது. அரசாங்கமே நேரடியாகச் செய்வதாயினும் பரவல் முறையில் கூட்டு முறையில் அமைக்கப்படுவதாயினும், கூட்டுறவு விவசாயம் வளம் பெற்றவர்களை மேலும் வளம் பெறுபவர்களாக ஆக்கவே பயன்படும். நிலமில்லாதவர்களும் சாதனங்களில்லாதவர்களும் இன்றினும் இழிந்த நிலையையே அடைவார்கள்" என்று துணிகின்றார்.

சமாஜவாதிகள் கம்யூனிசத்தால் — ஆட்சியைக் கைப்பற்றி அதிகாரத்தைக் கொண்டு எதையும் சாதித்து விடலாம் என்று கொள்கின்றார்கள். இந்தியாவில் கம்யூனிஸ்டுகள் தியாகமும் தீவிரமும் பொருந்தியவர்களன்று. மார்க்ஸ், லெனின் இத்தகையோர் இங்கு இல்லை. ஒன்றுபட்டு அதிகாரத்தைப் பெற முயற்சி எங்கே? காங்கிரஸ் கட்சியிலேயே அதிகாரத்தைப் பற்ற சுயநலத் தூண்டுதல் கிளம்புவதை நாம் பார்க்கின்றோம். தொண்டன்றி ஆட்சியே அவர்களைக் கவர்கின்றது. ஆகையால் அதிகாரத்தைப் பெறுதலும் அதை மக்கள் நலத்திற்குப் பயன்படுத்துவதும் எளிதானதல்ல.

காந்தியடிகளின் சீடர்களாகிய தலைவர்களே இன்று ஆட்சிபீடத்தில் அமர்கின்றார்கள். ஆனாலும் சீலத்தைக் குறைக்கும் வழிமுறைகள் அவர்களால் ஏற்கப்படுகின்றன.

## குடும்பக் கட்டுப்பாடு

நாட்டில் ஜனப் பெருக்கு அதிகம் என்பது உண்மை, அது தடுக்கப்படவும் வேண்டும். ஆயின் அதை முறையற்ற வழிகளில் செய்வது பொருந்துவதன்று. மக்களின் சீலம் என்னுயினும் எண்ணிக்கை பெருகுவதைக் குறைக்க வேண்டுமென்று கொள்வது பிழைபட்டதே. கட்டுப்பாடு, நேர்மை இவைகளாலும் ஜனப் பெருக்கு குறைக்கப்படலாம். விநோபாவடிகள் இந்தூரில் அதிகாரிகளுடன் பேசும்பொழுது இதை விளக்கி "குழந்தைகளுக்கு பாடம் சொல்லுதல், அவர்களுடன் உட்காருதல், அவர்களுடன் பேசுதல், அவர்களுடனே தூங்குதல் இவைகளால் கட்டுப்பாடும் தன்னடக்கமும் உண்டாகின்றன. குழந்தைகளை வளர்க்கத் தாயும் தகப்பனும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுகின்றார்கள். இதுவே தன்னடக்கத்திற்கு முதல் சாதனம். ஒரு குழந்தை தனக்குப் பிறந்தால் நாராயணனே வந்து பிறந்திருக்கிறான் "நர காம தீராயதே" தகப்பனை நரகத்தினின்று மீட்கின்றான் என்று கொள்ளுதல் வேண்டும். குழந்தையை ஒரு குழந்தை விடுதியில் விட்டு வைத்தால் குழந்தைக்கு பால் கொடுக்கமட்டும் தாயார் குழந்தையிடம் போகின்றாள். அந்நிலையில் கணவனும் மனைவியும் தனியாக இருக்க வேண்டியதாகும். அதில் பெரும் தொல்லையுண்டு. குழந்தையில்லா தம்பதிகள் விஷய வாசனைகளிலேயே உழன்று கொண்டிருந்தால் அவர்கள் ஒளியிழந்தவர்களாய்ப் போவார்கள். குழந்தைகள் குறைவாக இருந்தால் சௌகரியம்தான். ஆயின் குழந்தைகளே யில்லாவிட்

டால் அறிவு மழுங்கிப்போம், ஒளியும் போம், அவை வழியாய சிறப்பும் அற்றுப்போம்.

நியதியைப் பாராட்டி நிற்பதாயின் கணவனும் மனைவியும் சேர்க்கை பெற்றேயாக வேண்டுவதுமில்லை. ஒரு தம்பதிகள் தங்களுக்குக் குழந்தை வேண்டாமென்று நிச்சயம் செய்துகொண்டால் புணர்ச்சியை நாடுவானேன்? பிறருடன் புணர்ச்சி கூடாதென்பதற்காகவா? அந்நிலை எவ்வளவு இழிவானது. ஆத்மா அழிந்து போகாதா?'' என்று சொல்லுகின்றார்.

### வெளிநாட்டு யாத்ரிகர்களுக்காக மது!

வெளிநாட்டார் இந்தியாவில் சுற்றுவதால் வெளிநாட்டுச் செலாவணி நமக்கு கிடைக்கும் என்று கொள்ளப்பட்டு அவர்களுக்கு ராஜோபசாரம் செய்யப்படுகின்றது. அவர்களுக்காக எல்லா சுகபோக சாதனங்களும் திரட்டப்படுகின்றன. இந்நாட்டு பெண்களையும் சகோதரிகளையும் கலையின் பெயரால் அவர்கள் துய்க்க அநுமதிக்கப் படுகின்றார்கள் என்பது ஒரு வெட்கக் கேடான விஷயம். வியபசாரத்தை தடைசெய்ய சட்டங்கள் செய்யப்படும் பொழுது, ஒரு வழியில் அது ஆதரிக்கவும் படுகின்றது. சமுதாயத்தில் உயர்ந்தவர்களும் அதில் கலந்துகொள்ள ஆசை கொள்கின்றார்கள். மேலும் 'பேஷன்' என்று பண்பாட்டைக் குலைக்கும் வழியில் எவ்வளவோ மரியாதை குறைவான பழக்க வழக்கங்கள் புகுகின்றன. வெளிநாட்டார் அவர்கள் வழக்கப்படி சாராயம் முதலியவைகளைச் சாப்பிட வேண்டிய சௌகரியங்கள் செய்யப்படுகின்றன. ஹோட்டல்கள், கிளப்புகள் இவைகளில் குடிக்க ஏற்பாடுகள் உண்டு. யாத்திரிகர்கள் வருவதில்லையேல் அந்நகரங்களின் சோபையே போய்விடுமென்று சொல்பவர்கள் உண்டு. இவ்வாறு சீலக் கேடுகளுக்கு வசதிகளைச் செய்துவைத்தால் கட்டுப்பாடு எப்படி? ஒழுக்கம் எங்கே?

மாணவர்கள் ஒழுக்கத்தை அறிவதும் அதைக் கடைப்பிடிப்பதும் அரிது. ஏதோ நடப்பது நடக்கட்டும் என்று கொள்கின்றார்கள். சினிமா பார்ப்பது அவர்கள் தினசரி வழக்கமாகின்றது.

விலைவாசிகள் தினம்தினம் உயர்ந்து செல்கின்றன. அதற்குக் காரணம்: பண வீக்கம், அரசாங்க வரிகள் இவைகளாகலாம். மக்களுக்கு அதிகப் பணம் பெற்று அதை செலவழித்தால் தான் சுக ஜீவனம். வீட்டுக் குழந்தைகளையும் கவனிக்காது பணம் தேட தகப்பன் அலைய, தாயானவள் அதிகம் கற்காமலிருக்கவும் இளைஞர்களுக்கு அவர்களிடம் அதிகப் பாராட்டு இருப்பதற்கில்லை. நாளை சமுதாயத்தை ஆக்க உள்ளவர்கள் இளைஞர்கள்- அவர்கள் கல்வி முறை சரியாக அமைவதில்லை. வகுப்புகளில் மந்தையில் அடைப்பதைப் போல மாணவர்களை அடைத்து நடக்கும் இன்றைய பள்ளிகள் நாளை சமுதாயத்தார்களை சரியாக வளர்க்கும் என்று சொல்வதற்கில்லை. அவர்களுக்கு யார் நல்ல வழிகாட்டுவார்கள்? இந்த விஷம சூழ்நிலை முற்றுமாக மாறினால் தான் நாளைய சமுதாயத்தைப் பற்றி நாம் நம்பிக்கை கொள்ள முடியும்.



## இரண்டாம் அத்தியாயம்

# இந்த சுவரொட்டி விளம்பரங்கள்

*"நான் சினிமா தொழிலை எதிர்த்து நிற்கவில்லை. நான் விஞ்ஞானத்தைப் பாராட்டுபவன், விஞ்ஞானத்திற்கு மாறுபடாமல் சினிமா தொழில் வளரவேண்டுமென்று கொள்பவன். ஆயின் ஆபாசக் காட்சிகளால் கண்களைக் கவர்தல் கூடாது. அதைத் தடுக்க சத்தியாக்ரகம் செய்வதும் யோக்கியமானது தான். ஆபாச விளம்பரங்களுடன் நான் போர் தொடுக்கவே செய்கிறேன்."*

**—வினோபா**

"தாங்கள் தெருவில் ஒட்டியுள்ள சுவரொட்டியைப் போன்ற படமொன்றை எனக்குக் கொடுப்பீர்களா?" என்று ஒரு நண்பர் ஒரு சினிமா மேனேஜரைக் கேட்டார்.

"அது உமக்கு எதற்காக?"

"என் அறையில் அதை மாட்டி வைக்கின்றேன்."

"அதைத் தங்கள் அறையில் மாட்டி வைக்கப் போகின்றீர்களா!"

"ஆமாம்."

"தங்களுக்கு வெட்கமும் சங்கோசமும் இல்லையா, இதுபோன்ற படத்தை வேண்டுகின்றீர்களே?"

"தாங்கள் சொல்லுவது எனக்கு விளங்கவில்லையே?"

"இதுபோன்ற படத்தை யாராவது தங்கள் வீட்டில் வைத்துக் கொள்வார்களா?"

"படம் கெட்டதென்று தாங்கள் கொள்வதாயின் அதையேன் தெருச்சுவர்களில் ஒட்டுகின்றீர்கள்?"

"'சரிதான். வியாபார முறை வேறு!''

''வீட்டிற்கு கூடாததொன்று வியாபாரத்திற்கும் கூடாதது தானே?''

'' தாங்கள் சொல்லுவது சரிதான். ஆயின் இன்றைய வியாபாரம் அப்படி நடப்பதில்லை.''

''இதை நாங்கள் எப்படி ஏற்றுக் கொள்வது? ஆங்கிலத்தில் நேர்மையே சரியான வழி என்று சொல்லப்படுகின்றதே?''

''அது உண்மைதான். ஆயின் இன்றுள்ள கலவர வாழ்க்கையில் நேர்மைக்கு இடமேது?''

''எது எளிதாக வருகின்றதோ அது எளிதாகப் போய்விடுகின்றது. இதுவும் தாங்கள் கவனித்துப் பார்க்க வேண்டாமா?''

''இனிச் செய்கின்றேன். நிச்சயமாக சிந்திக்கின்றேன்.''

* * *

இன்று வியாபாரத்திற்கு விளம்பரம் அங்கமாகின்றது, அதுபோலவே சுவரொட்டிகள் சினிமாத் தொழிலிற்கு அவசியமாகின்றன. விளம்பர வித்தை பெரிதாக வளர்ந்துவிட்டது. இதை சாஸ்திரமாகவும் கலையாகவும் உயர்த்தியுள்ளார்கள். அமெரிக்காவில் விளம்பரங்களால் மக்களை எப்படிக் கவர்வது என்பது பெரிய மனோதத்துவ ஆராய்ச்சியாக வளர்ந்துள்ளது. கல்வி புகட்டுவதற்குக் குழந்தைகளின் மனோ விஞ்ஞானத்தை அறிவதைவிட அதிக அக்கறை இதில் கொள்ளப்படுகின்றது.

விளம்பரங்கள் பிறர் மனதைக் கவர்தல் வேண்டும். அதற்கு உணர்ச்சிகளை தட்டி எழுப்ப வேண்டும். பெரிய எழுத்துகள், புதுமை வியப்பு இவை நிறைந்தவைகள் பிறர் கவனத்தைப் பற்றும். எழுத்துக்களைப் படிக்க வேண்டுவதுமில்லை. படங்களே எல்லா

வற்றையும் விளக்கும் வகையில் அமைதல் வேண்டும். விளம்பரப் படத்தை பார்ப்பவர்கள் நேரடியாக அன்றி மறைமுகமாக அவர்கள் கவரப்படல் வேண்டுமென்பது ஒரு நோக்கம். ஸ்காட்லண்டு எடின்பரோ சர்வகலா சாலை பேராசிரியர் திரு. ஜேம்ஸ் டிரேவர் அவர்கள், "தொழிலுற்பத்தியின் மனோ விஞ்ஞானம்" என்ற நூலில் "ஒரு விளம்பரம் பார்ப்பவர் மனதில் எவ் வுணர்ச்சியைத் தூண்டவேண்டுமென்று வெளிப்படு கின்றதோ அவ்வுணர்ச்சியை எழுப்ப மனோ சூழ்நிலையை உண்டாக்குதல் வேண்டும். அப்பொழுதுதான் விளம் பரப்படுத்தப்படும் பண்டங்களை வாங்கும் ஆவல் உண் டாகும். விளம்பரத்தைப் பார்ப்பவர் தாம் பிறரால் தூண்டப்படுவதாக எள்ளளவும் நினைக்க இடமிருக்க லாகாது. இது மிகவும் கடுமையான காரியம், ஆயின் இது திறமையாகச் செய்யப்படும்பொழுது பெரும் பயன் விளைப்பதாக இருக்கும்" என்று எழுதுகின்றார்.

இன்று இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடு களையே எதற்கும் பின்பற்றுகின்றோம். விளம்பரத் துறையிலும் நாம் அவர்கள் வழியே செல்கின்றோம். அதிலும் சினிமாத் தொழில் அதிகமாக அவ்வழியைப் பற்றிச் செல்கின்றது. இன்று சினிமா படங்களில் காணப்படும் படங்கள் நாளை காலண்டர்களில் இடம் பெறுகின்றன; பிறகு நம் வீடுகளில் படங்களாகத் திகழ்கின்றன. தலைவன் தலைவிகளை எந்நிலையிலும் படமாக நாம் வரைந்துகொள்கின்றோம், மேனாடுகளை பின்பற்றுவதில்லை என்ற திடசங்கற்பம் நிலைப்பதில்லை.

### சினிமாவில் செல்வாக்கு

சினிமாவின் செல்வாக்கு பெருகி வருகின்றது. மனக்களிக்கைக்காக மட்டுமல்லாமல் சினிமா கல்வி போதனைக்கும் உதவும் சாதனமாக உயர்ந்து நிற்கின் றது. ஒவ்வொரு நாட்டிலும் அதன் ஆட்சியமைப்பை

வலுப்படுத்தவும் அதன் செயல் திட்டங்களை மக்கள் மனதில் பதியவைக்கவும் சினிமா உதவுகின்றது. ஆங்கிலேயர் காலத்து அவர்களது பெருமையையும் நன்மையையும் படங்கள் பாராட்டி நிற்பதானுல் மக்கள் அதில் இனிமையைக் காணமாட்டார்கள். அச்சமயம் அது கலா விநோத கேளிக்கை சாதனமாக நின்றது. பொழுதுபோக்காகவே சினிமா பார்ப்பதானுலும் படங்கள் மனதில் சிலவற்றையாவது பதிக்காது செல்வதில்லை. அதிலும் இளைஞர்களும் குழந்தைப் பருவத்தவரும் அப்படங்களால் மாற்றப்படுகின்ருர்கள். அவர்கள் சினிமா பார்ப்பது நல்லதா கெட்டதா என்பதைப்பற்றி அபிப்ராயபேதங்கள் உள்ளன. இங்கிலாந்தில் ஒரு ஆராய்ச்சி அது இளைஞர்களிடம் ஒரு குற்ற மனப்பான்மை உண்டாக்குகின்றது என்று முடித்துள்ளது. பிரான்ஸிலும், தீமையே விளைவதாகக் கொள்ளப்படுகின்றது. அமெரிக்காவிலேயே இருதர அபிப்ராயங்கள் உள்ளன. படம் பார்ப்பவர்களின் வயது, அவர்கள் பணம் இவைகள் தேய்கின்றன என்பது உண்மை. படிப்புத்தன்மையும் அதனுல் குறைந்துபடுகின்றது. படிக்கவேண்டியவர்கள் அறிவையன்றி உணர்ச்சிகளை பெறுபவராகின்ருர்கள்.

### மனே விஞ்ஞானிகளின் அபிப்ராயங்கள்

வயது வளர வளர குழந்தைகள் படங்களினின்று அதிகம் அறிந்துகொள்கின்ருர்கள். தப்பாக படங்களை அறிந்துகொள்வதால் தீமையும் அதிகமாகவே வளருகின்றது. விளையாட்டு, சண்டை, குற்றம், இவைகள் மிகும் படங்களைப் பார்ப்பதால் அவர்களுக்கு அவ்வுணர்ச்சிகள் பெருகவே செய்கின்றன. அவர்களும் உணர்ச்சிகளுக்கு பணிபவராகின்ருர்கள்.

அமெரிக்க விஞ்ஞானிகள் முடிவு: குழந்தைகளும் இளைஞர்களும் சினிமா படங்கள் பார்ப்பது தீயது என்

யது தான். ஸ்ரீ ஹென்றி ஜெ போர்டுமான் என்பவர் சினிமாக்களால் வளர்க்கப்படும் குழந்தைகள் என்ற ஒரு நூலை எழுதியுள்ளார். அவர் முடிவுகளை ஏற்பவர்கள் பலர். ஸ்ரீ டபுள்யூ டபுள்யூ சார்ட்டர்ஸ் என்பவர் "இளைஞர்களது வாழ்க்கையில் சலனப்படங்கள்" என்ற தன்னூலில் "சினிமா படங்கள் இளைஞர்கள் மனதில் படிவதற்குக் காரணம் அவை உணர்ச்சிகளைத் தூண்டு வதால் தான்" என்று சொல்லுகின்றார்.

உணர்ச்சிகளை வெறுக்கும்படி இளைஞர்களைச் செய்வது சுலபமன்று. வேறொரு விஞ்ஞானி "ஒவ் வொருவருக்கும் ஒரு மனப்போக்கு உண்டு. அதை ஓட்டியே உள்ளெழுச்சிகள் தோன்றுகின்றன. சினி மாப் படங்களால் அவ்வுணர்ச்சிகளுக்கு ஊக்கமுண்டா கின்றது. அவைகள் உறுதியாக நிலைக்கவும் செய் கின்றது என்கிறார்.

உணர்ச்சிகள் சினிமா படங்களால் தூண்டப்படு கின்றன என்பதை யாவரும் அறிதல் வேண்டும். இந்தியா போன்ற எளிய நாட்டில் ஒவ்வொருவரும் சினிமாவிற்காக எவ்வளவு பணத்தை செலவழிக்கின் றார்கள் என்பதையும் கூட்டிப் பார்க்கவேண்டும். அமெரிக்கா குபேர நாடு, நாம் அவர்களைப்போல சினிமாவில் பணத்தை இறைக்கலாமா?

பணக்காரர்களை விட எளியவர்கள் எண்ணிக்கை யில் பெருகுவதைப் போல எளியவர்கள் உணர்ச்சி களே அதிகமாகத் தூண்டப்படுகின்றன. சினிமா படத்தை ஒருதரம் பார்ப்பதால் திருப்தி உண்டாவ தில்லை. மேலும் மேலும் அதைப் பார்க்கும் வேட்கையே பெருகுகின்றது. இன்றுள்ள படங்கள் இளைஞர்களை பலமும் அறிவும் உள்ளவர்களாக ஆக்குவதைவிட அவர்களைக் கெடுக்கவே உதவுவனவாயுள்ளன. பல காரணங்களால் இப்படி நிகழ்கின்றது. சினிமாக்களில்

நன்மையைத் தூண்டுவதே இல்லையென்பதல்ல, ஆயின் அவை தேய்ந்து விடுகின்றன.

சுவரொட்டிகள் மனதைப் பற்றுவன

சுவரொட்டிகளைத் தயாரிப்பது சினிமாக்காரர்களின் கையிலுள்ளது. படங்களில் உள்ள தோற்றங்கள் மட்டுமே சுவரொட்டிகளில் காட்டப்படுகின்றன என்பதுமில்லை. சுவரொட்டிகளில் சினிமாக்காரர்களின் இஷ்டப்படி தோற்றங்கள் சித்தரிக்கப்படுகின்றன. போட்டோ படங்களையும் திரித்து வெளியிடுவது எளிதானது. பெரிய காகிதங்கள், வர்ணப்படங்கள், கொட்டை எழுத்துகள் இவை நிறைந்த சுவரொட்டிகள் எதையும் செய்யவல்லன. பார்ப்பவர் மனதைக் கவரும் அடிப்படையிலேயே அமைகின்றன.

ஒருநாள் அலகாபாதில் பிரார்த்தனைக்குப்பிறகு மாணவர்களும் பாடசாலைக் குழந்தைகளும் மைதானத்தில் கூடியிருக்க நான் அங்கு சென்றேன். சர்வோதயத்தைப்பற்றிய சிந்தனை கோஷ்டியாக நாங்கள் அமைந்தோம். இடையே நான் "வகுப்புகளில் பாடத்தில் மனஞ்செல்லாதபொழுது என்ன செய்கின்றீர்கள்" என்று கேட்டேன். அவர்கள் "நாங்கள் செருப்புகளை தேய்க்கவும் கூச்சல் போடவும் செய்கின்றோம்" என்று சொன்னார்கள். அதை அவர்கள் எங்கிருந்து கற்றுக் கொண்டார்கள் என்று கேட்டேன். அவர்கள் ஒரு குரலாக சினிமாவிலிருந்து கற்றுக்கொண்டதாக பதில் அளித்தார்கள். சினிமா பார்ப்பதை யாரிடமிருந்து கற்றுக்கொண்டீர்கள் என்று கேட்டதற்கு சிலர் பெற்றோர்களிடமிருந்து என்றும் சிலர் பெரிய சுவரொட்டிகளினின்று என்றும் பதிலளித்தார்கள்.

சுவரொட்டிகளின் பலாபலன்களைப்பற்றி இந்தி எழுத்தாளர் பிரபாகரர் என்பவர் "சினிமா சுவரொட்

டிகள் எல்லா மரியாதைகளையும் தாண்டி நிற்கின்றன. என் முன்பு ஒரு சுவரொட்டி இருக்கின்றது. அதில் ஒரு இளைஞன் ஒரு பெண்ணை அணைத்துக்கொண்டு நிற்கின்றான். அருகே மற்றொரு படத்தில் ஒரு பெண்ணின் துடையில் ஒரு வாலிபன் உட்கார்ந்துகொண்டிருக்கின்றான். அப்படங்கள் மிகவும் பெயர்போன படங்களின் விளம்பர சுவரொட்டிகள். பாதையில் நடந்துபோகும் இளைஞர்களும் சிறுமிகளும் அப்படங்களை உற்று நோக்குகின்றார்கள். அவர்கள் ஆவேசம் மேலிட்டே செல்கின்றார்கள். தேசாபிமானமன்று, நேர்மை உணர்ச்சியுமன்று. கேவலம் காம உணர்ச்சி பெற்றவர்களாகச் செல்கின்றார்கள். இவ்வுணர்ச்சி எவ்வளவிற்கும் செல்லவுள்ளது! அதையும் நான் அப்பொழுதே கண்ணாரக் கண்டேன். இரண்டு இளைஞர் அவ்வழி சென்றவர்கள் படத்தைப் பார்க்க நின்றார்கள். பிறர் அப்படத்தைப் பார்த்து மகிழ்வதைக் கண்டார்கள். தாங்களும் ஒருவரையொருவர் ஆலிங்கனம்செய்து நின்றார்கள். அந்நிலையிலும் அவர்கள் அப்படத்தைப் பார்த்தவண்ணமே அமைந்தார்கள். படத்தின் விளைவு இதுதான்!'' என்று எழுதுகின்றார்.

இன்று நம் வீடுகளில் படங்களும் காலண்டர்களும் தொங்கவிடப்படுகின்றன. தேவர்கள் படங்களையும் விசித்திரமாக வரைகின்றார்கள். அப்படங்களைப் பார்த்தாலும் இளைஞர்கள் மனம் பழுதடையவே செய்யும். தெய்வங்களைப்பற்றிய கௌரவ புனித உணர்வு அவர்கள் மனதில் பதியாது போகும். சமயத்தின் பெயராலும் பல கெட்ட ஆசாரங்கள் புகுந்துள்ளன. அவைகளை தீயவையென்று புறத்திடாமல் அவைகளின் நற்பகுதிகளால் நாம் பயன்பெறுதல் வேண்டும்.

விளம்பரமும் எவ்வளவு தீமை பயப்பதாகத் திரிக்கப் படுகின்றது ? பீடி விளம்பரங்களைப் பார்த்தால் அதன் தீமை விளக்கமாகும். மகாராஷ்டிரத்தில் சிவாஜீ மகா ராஜர்பேரில் விளம்பரங்கள். வங்காளத்தில் காளி தேவியின் பெயரில் விளம்பரங்கள். வேறெந்த நாட்டிலும் விளம்பரக்காரர்கள் இப்படி நடந்துகொள்வதில்லை. மேனுடுகளில் இயேசு, மேரி இவர்கள் பெயரிலும், இஸ்லாமிய நாடுகளில் நபிநாயகம் அவர்கள் பெயரிலும் விளம்பரங்கள் விடுவதில்லை. அவ்விளம்பரங்களைக் கண்டால் துக்கம் மேலிடவே செய்கின்றது. கல்யாண் பத்திரிக்கையின் முதுபெரும் ஆசிரியர் ஸ்ரீ பொத்தார் அவர்கள் "சினிமாவால் ஆண்களும் பெண்களும் அடைந்துள்ள சீர்கேடு வளர்ந்து செல்லுவதானுல் சீலமும் நேர்மையும் முற்றுமாக அழிந்துபடும். சினிமா நடிப்புகளும் பாடல்களும் ஒருவன் தாய், சகோதரி, பெண் இவர்களுடன் சொல்வதற்கு கூச்சப்படும் வகையில் அமைகின்றன. ஆயின் பெண், சகோதரி, தாய் இவர்களை அழைத்துக்கொண்டு சினிமா செல்வோரின் கூட்டங்களோ பேரளவில் அமைகின்றன. முதலில் சிலவற்றைப் பார்க்க தலையை இறக்கிக்கொண்டாலும் பிறகு தலையை உயர்த்தி, அதை ஆர்வத்துடன் பார்க்கும் வழக்கம் வந்துவிட்டது. படங்களில் பாடுபவர்கள், நடனம் செய்யும் பெண்களின் பெரிய படங்களை வரைந்து சுவர்களில் ஒட்டி மக்களின் மனதைக் கவரும் வழக்கமும் பெருகிவருகின்றது. நடிகைகளின் தோற்றங்களில் ஆபாசங்களே சித்தரிக்கப்படுகின்றன. அந்த நடிகைகளின் படங்கள் நாட்டின் ராஷ்டிரபதி, பிரதம மந்திரி இவர்களின் படங்களுடன் சேர்த்து சித்தரிக்கப்படுகின்றன. நடிகைகளைப் பார்க்க பெருங் கூட்டங்கள் திரளுகின்றன. இவைகளைப் பார்க்கும் நல்ல குடும்பப்பெண்களும் நடிக்கவும் நடனம் செய்

யவும் ஆசைபெற்று, வீடுகளைவிட்டு ஓடி தங்கள் வாழ்க்கையை இழந்துகொள்கின்றார்கள். மக்களின் பொருள் நஷ்டம், துராசாரம், விபசாரம் முதலிய இன்னல்கள் தோன்றுவதன்றி, வேறு சமுதாயம் பெறும் இலாபம் என்ன? கலாவிநோதம் கேளிக்கை என்பதெல்லாம் ஆபத்திற்கும் கொண்டுவிடலாம். போதை பானங்களின் பெருமையைப் பாராட்டி அவை களை திணிப்பதைப்போல சினிமாவையும் பாராட்டி நிற்பது பிழைபட்டதாகும்" என்று எழுதுகின்றார்.

சிறிது காலமாக பூஜ்ய விநோபாவடிகள் ஆபாச சுவரொட்டிகளை அகற்றுங்கள் என்று ஒரு இயக்கத்தை ஆரம்பித்து நடத்துகின்றார். அது மக்களின் மேம்பாட் டிற்கு வேண்டப்படுவதொன்றாகும். சினிமா விளம் பரங்களைச் சுவர்களில் ஒட்டியும் மோட்டார்களிலும் வண்டிகளிலும் மாட்டி ஊர்வலம் நடத்தியும் பிரசாரம் செய்வது வயதானவர்களையும் மயக்கவே உதவுவது. அனைவரும் அடிகளின் இயக்கத்தில் கலந்து வேண்டிய உதவியை அளித்தல் அவரவர் கடமையாகின்றது. மக்களுக்கு அதன் தீமைகளை எச்சரிக்கை செய்தும், அரசாங்கங்கள் அவ்விளம்பரங்களை தடைசெய்ய பொது அபிப்ராயத்தை உண்டாக்கியும், அனைவரும் இயக் கத்தை வலுப்படுத்த வேண்டும். நாட்டின் மேம் பாட்டை நாடுகின்றவர்கள் இப்பணியை தம்முடைய தாகக் கொள்வது இன்றியமையாததாகின்றது.

விளம்பரத்திற்கெல்லாம் தீயது சுவரொட்டி விளம் பரம். சமுதாய முற்றுமாக மனச் சீரழிவு ஏற்படுகின் றது. இது பெருநோயாக வளர்ந்து வருவதைக் கண்டு மனம் பதறுகின்றது. ஆயின் எதிராறு நீந்துவதைப் போல் அவ்வளவு கடுமையான வேலையன்றோ இது? அங்குமிங்கும் இப்படங்களைப் பற்றி பேச்சு எழின் அப் பேச்சு மடக்கப்படுகின்றது.

## அடிகளின் துயரம்

"நோய் நோயே தான். இது அகற்றப்படாவிட்டால் விளைவு சாவுதான், பேரின்னலாகும்" வருந்தி தன் வேதனையை அடிகள் இப்படி வெளியிடுகின்றார் : "நான் சினிமாத் தொழிலை எதிர்த்து சத்தியாக்ரகம் செய்யவில்லை. எனக்கு விஞ்ஞானப் பற்று உண்டு. அதன் வரம்புகளுக்குட்பட்டு சினிமாவும் வளரட்டும். நல்ல படங்களும் வெளிவருகின்றன. துளசிதாஸ், துகாராம் இவர்களது படங்களும் வெளிவந்துள்ளன. அத்யாத்மத்தையும், விஞ்ஞானத்தையும் பொருத்தாவிட்டால் விகாசம் ஏற்படுவதில்லை ; உலகம் உய்யாது என்று எப்பொழுதும் சொல்லி வருகின்றேன்."

## ஆபாச சுவரொட்டிகளை அகற்றினாலன்றி அமைதி இல்லை

இரவு பத்து மணிக்குமேல் படக்காட்சி கூடாது. நான் அலஹாபாத்திற்குச் சென்றிருந்தேன். மக்கள் எனக்கு டாண்டன் மைதானத்தில் வரவேற்பு பத்திரம் அளித்தார்கள். ஸ்ரீ டாண்டன் அவர்களும் வந்திருந்தார்கள். "முனிசிபாலிடி இரண்டு காட்சிகள் கூடாது என்று தீர்மானித்தது. ஆயின் அதை லக்னோவிலுள்ள அரசாங்கம் ஏற்கவில்லை என்று குறிப்பிட்டிருந்தது. ஏன் ? வருமான நோக்கா ? சட்டத் தடையா ? தர்மம் என்றால் புத்தி மழுங்கிப் போகின்றது. ஆனாலும் இதிலும் மனமாற்றம் ஏற்படலாமென்று நம்புகின்றேன். ஒருதரக் காட்சி என்பதற்காக சத்தியாக்ரகம் ஏற்பட வேண்டாம். ஆனாலும், ஆபாசப் படங்கள் கண்களை பாழ்படுத்தலாகாது என்பதற்கு சத்தியாக்ரகம் செய்வது நியாயமானதே. நான் அதை எதிர்த்து போர் தொடுத்துள்ளேன்" என்றார். அவரொலி எங்கும் பரவி வருகின்றது.

# மூன்றும் அத்தியாயம்

## இந்தூரில் சத்தியாக்ரகம்

*" இந்தூர் நகரில் நீண்டு தங்க நேர்ந்தது. அது வனப்பும் அழகும் நிறைந்தது. ஐந்து வாரங்கள் அங்கு தங்கிய பிறகு அந்நகரில் சுவர்களில் ஆபாசமான படங்கள் ஒட்டப்பட்டிருப் பதைக் கண்டேன். அவ்வளவு வெட்கக்கேடான படங்களைப் பார்க்க நாம் எப்படி சகிக்கமுடியும்? நாமும் இதைக்கவனிக்காது சென்ருல் சுதந்திரத்தை யார்தான் காப்பாற்றுவார்கள்? இன்னல் கருமேகங்களாக திரள்கின்றன. நாட்டைக் காப்பாற்ற வீரர்களின் சேவை வேண்டும். இந்தப் படங்களை நீங்கள் அகற்றும் பொழுது சுகமாக வாழ்வீர்களென்று நம்புகின்றேன் "*

**—விநோபா வடிகள்.**

சுதந்திர நாளன்று நகரசபைத் தலைவர் மைதானத்தில் ஒரு கூட்டம் கூட்டியிருந்தார். அன்று அங்கு அடிகளின் பிரார்த்தனை கூட்டம் நடைபெற திட்டம். அடிகள் வந்தார், பிரார்த்தனை ஆரம்பமாயிற்று. அடிகளின் சொற்பொழிவு ஒரு மணி நேரம்; மௌனம் ஐந்து நிமிஷம். அடிகள் தன்னிதயத்துள்ளதை மக்களிடம் வெளியிட்டுக் கூறினர்: " நாம் இந்நகரில் இருக்கும் பொழுது இருபுறச் சுவர்களிலும் ஆபாச சுவரொட்டிகளைப் பார்த்தோம். அவை சீலக்கேடானவையாயில்லாமல் போகலாம்; ஆயினும் ஆபாசமானவை. தகப்பனுடன் செல்லும் குழந்தை தகப்பனை ஒரு படத்தின் பொருள் என்னவென்று கேட்டால் அதை குழந்தைக்கு விளக்க முடியாமல் வெட்கப்படத் தக்கவை படங்கள். சுதந்திரத்தை காப்பாற்ற வைராக்கியம் (துறவு) சீலம்,

கடுமை இவைகளை எப்படிப் பெறுவோம்? சுதந்திரத்தைப் பெற அரும்பாடு பட்டோம். இத்தகைய போக வாழ்க்கையால் அதைக் காப்பாற்ற முடியுமா?'' மீண்டும் அவர் தலைவரைப் பார்த்து, "தங்கள் நகரத்திலுள்ள இந்த ஆபாசப் படங்களை அகற்றுங்கள். அவ்விடங்களில் ஆன்றோர்களின் போதங்களை எழுதிவையுங்கள். இந்தக் கூட்டத்தை விட்டுத் திரும்பும் பொழுது சுவரொட்டிகளை அகற்றும் வேலையை மேற்கொள்ளுங்கள். அனைவரும் சேர்ந்து அவைகளை அழித்துப் போடுங்கள்.'' என்ற கோரிக்கையுடன் தன் பேச்சை முடித்தார்.

## விஸர்ஜன ஆஸ்ரமம்

ஆகஸ்டு பதினைந்து காலை அடிகள் இந்தூருக்கு புறத்தேயுள்ள நௌலகா பாகில் விஸர்ஜன ஆஸ்ரமத்தை ஆரம்பித்துவைத்து அங்கு ஒரு செடியை நட்டு வைத்தார். அதை நிர்வகிக்க ஒரு சூன்ய கமிட்டியையும் ஏற்படுத்தினர். அது சர்வோதய கேந்திரஸ்தாபனமாக அமைகின்றது. அன்றே அரசாங்க வேலைகளை செய்து ஓய்வு சம்பளம் பெற்று வருபவர்கள் சங்கம் ஒன்றையும் ஆரம்பித்து வைத்தார். அது வானப்ரஸ்த மண்டலம். அதன் அங்கத்தினர்கள் நகரின் சுத்தத்தை கவனித்து மற்ற நிர்மாண வேலைகளை மேற்கொள்ள சங்கற்பம் பூண்டார்கள்.

இந்தூரில், ஒரு மாதத்திற்குப் பிறகு ஒருமாதம் ஸ்ரீமான் மஹேஸ்வர க்ஷேத்திரத்திற்கு பாதயாத்திரை செய்து, அடிகள் இந்தூர் திரும்பினர். அவர் இந்த சுவரொட்டிகளைப் பற்றி சிந்தனை கொண்டிருந்தார். அவர் "ஒரு மாதம் நான் வெளியே இருந்து வந்தாலும் சுவரொட்டிகள் அப்படியே தம்மிடத்தில் உள்ளன. ஒன்றுவது அப்புறப்படுத்தப் படவில்லை. நீங்கள் வாளா இருந்தீர்கள் போலும்! அவைகளை

அகற்றியிருப்பின் நாடு முழுதும் நீங்கள் செய்ததை அறிந்துகொண்டிருப்பார்கள். சட்டத்திற்குப் பயந்து நீங்கள் ஒன்றும் செய்யாமலிருப்பது கோழைத்தனம் தான் '' என்று சொன்னார்.

அன்று மாலையே சில படமுதலாளிகள் அடிகளைச் சந்தித்துப் பேசினார்கள். அவர்கள் அச்சுவரொட்டிகளை அகற்ற அவர்களுக்கு மேலிருந்து உத்திரவுகள் வரவேண்டுமென்று சொன்னார்கள். அதைக் கேட்ட அடிகள் ''எதற்கும் மேலிடத்து உத்திரவுகளா? நான் உங்களை மனிதர்களாகக் கொள்கின்றேன். உங்களைக் குடிமக்கள் என்று கொள்கின்றேன். கழுதைமேல் சுமையை ஏற்றினால் அது எப்படியும் மறுக்காது சுமையைத் தூக்கிப் போகும். ஆயின் ஒன்றைச் செய்ய மறுக்க சக்தியுள்ளவன் மனிதன். அமெரிக்கர்கள், இங்கிலாந்து கட்டாயப்படுத்தி அனுப்பிய தேயிலையை கடலில் தூக்கிப் போட்ட கதையை அறிவீர்களா?'' என்று கடிந்து கொண்டார்.

சத்தியாக்கிரக தயாரிப்புகள்

'' மேலும் நான் பிரதம மந்திரி முதல் உங்கள் வரை அனைவருக்கும் எச்சரிக்கை கொடுக்கின்றேன். அரசாங்கத்தாலோ உங்களாலோ இவ்விஷயத்தில் தாமதமும் அக்கறையின்மையும், இனி காட்டப்படுமாயின் இப்பிரச்னையை அகில இந்திய சத்தியாக்ரக பிரச்னையாக ஏற்கவேண்டி வரும். சென்ற பத்து வருஷங்களில் தப்பாய பல சத்தியாக்ரகங்களை நானே தடுத்துள்ளேன். நீங்களே ஆபாச சுவரொட்டிகளை அகற்றிவிட்டால் நல்லது, இல்லையேல் சத்யாக்கிரகம் நடக்கவே செய்யும். உங்களுக்கு வேண்டுமாயின் இந்த சுவரொட்டிகளை உங்கள் வீடுகளில் வைத்துக் கொள்ளுங்கள். வீட்டின் புறச்சுவர் சமுதாய வாழ்க்கையுடன் சம்பந்தம் பெற்றது'' என்று அவர்களுடன் தன் பேச்சை முடித்தார்.

அடிகளின் ஆர்வத்தைக் கண்ட வானப்பிரஸ்த மண்டல் அவ்வேலையை தானே ஏற்றுக் கொண்டது. காந்தியடிகளின் பிறந்த நாளன்று அம்மண்டல் ஒரு கூட்டம் கூட்டியது. அதற்கு பட முதலாளிகள் வந்திருந் தார்கள். "லம்பே ஹாத்" என்ற படத்தின் சுவரொட்டி களைப்பற்றி. வாதம் நடந்தது அந்தப் படம் ஆபாசமான தென்றும் அச்சுவரொட்டி அகற்றப்பட வேண்டு மென்றும் அனைவரும் ஒப்புக்கொண்டார்கள்

### வானப்பிரஸ்த மண்டலத்தின் முயற்சிகள்

இரண்டு நாட்களுக்குப் பிறகு படமுதலாளி அச் சுவரொட்டியை அகற்றுவதாகச் சொன்னார், பிறகு முதலாளியின் அபிப்ராயம் மாறிவிட்டதால் அதை அகற்றமுடியாதென்று சொல்லி அனுப்பினார். மண்ட லத் தலைவர் ஸ்ரீ ரெங்கே, ஜில்லா கலெக்டர் அவர்க ளுக்கு அவரை தன் அதிகாரத்தைக் கொண்டு அச் சுவரொட்டியை அகற்ற வேண்டிக் கொண்டார். ஆனால் கலெக்டர் ஒன்றும் செய்யவில்லை. மீண்டும் 26வயன்று மண்டலின் கூட்டம் கூட்டப்பட்டது. அதில் படமுத லாளி வெளி சென்றிருக்கிறரென்றும், மாற்றுப் படம் ஒன்று தயாரிக்கப்பட்டிருப்பதாகவும் சொல்லப்பட்டது. ஆயின் அப்புதுப் படம் அதிக ஆபாசமாக அமைந்தது. ஸ்ரீ ரெங்கே மத்திய பிரதேச சர்வோதய மண்டலின் தலைவருக்கு விவரமாக கடிதம் எழுதினர். இனி தாம திக்க இடமில்லையென்றும் காலத்தை வீணக்குவது கூடா தென்றும் எழுதினர் பிரதேசத் தலைவர் காலதாமதம் கூடாதென்றும் அடிப்படை சீலப் பிரச்னையை சத்தியாக் ரகத்தை கொண்டே அணித்தே தீர்க்க வேண்டுமென் றும் அவருக்கு எழுதினர். இரண்டு நாட்களுக்குப் பிறகு அவரே இந்தூர் சினிமா முதலாளிக்கு "லம்பே ஹாத்" பட விளம்பரத்தைப்பற்றி "சட்டத்தின் கட்டளையைவிட சீலத்தின் கட்டளையை மேலாகநினைத்து

அச்சுவரொட்டியை நீங்கள் அகற்ற வேண்டும். நவம்பர் 4வுக்குள் நீங்கள் அதை அகற்ற வேண்டுமென்று கோரு கின்றேன். தாங்களும் இந்தூரில் சீல நிலையை உயர்த்த எங்களுடன் ஒத்துழைப்பீர்கள் என்ற நம்பிக்கையுடன் இதை எழுதுகிறேன். தாங்கள் எங்கள் கோரிக்கைக்கு இணங்காவிட்டால் நாங்கள் நவம்பர் 5வ தேதி காலை யில் சத்யாக்கிரகம்செய்து அதை அகற்றலாம் என்பதை யும் தெரிவித்துக் கொள்கின்றேன்'' என்று எழுதினார்.

### யோக்யமான சத்தியாக்ரகம்

இந்தக் கடிதப் போக்குவரத்துகளை எடுத்துக் கொண்டு மண்டலின் காரியதரிசி அக்டோபர் 29வ அடிகளை சந்தித்துப் பேச சித்துவார என்னுமிடத் திற்குப் போனார். அடிகள் எழுத்து ரூபமாக நவம்பர் 5வ காலை நான்கு மணிக்கு சத்தியாக்ரகம் மேற்கொள்ள அநுமதி கொடுத்தார். பிறகு சத்யாக்ரக தயாரிப்புகள் விரைவாக நடைபெற்றன.

### முதல் மந்திரியுடன் பேட்டி

நற்காலம் கிட்ட மத்திய பிரதேச முதன் மந்திரி ஸ்ரீ கைலாசநாத காட்ஜு அவர்கள் இரண்டாந் தேதி இந்தூர் வந்தார். சர்வோதய மண்டலைச் சேர்ந்த ஒரு கோஷ்டி அவரை பேட்டிகண்டது. விருத்தாந்தங்களைச் சொல்லி மேல் நடக்கவுள்ள சத்யாக்ரகத்தைப் பற்றியும் அவரிடம் தெளிவாக உரைக்கப்பட்டது. அவரும் பொறுமையுடன் கேட்டு மக்களின் சீலத்தைத் தேய்க்கும் விளம்பரங்களைப்பற்றி சட்டம் யாது சொல்லினும் அவைகளை அகற்றவேண்டுவது நியாயம்தான் என் பதை ஒப்புக்கொண்டார்.

### சத்தியாக்ரகம் : சுவரொட்டிகள் தீக்கிரையாகின்றன

ஒரு வார காலத்திற்கு நவம்பர் 5வ யன்று நடக்க வுள்ள சத்தியாக்ரகத்தைப்பற்றி பேராரவாரம். மண்ட

லின் தலைவரும் பிற வயோதிகர்களும் முதலாளிகள் தாமாகவே ஆபாச சுவரொட்டிகளை எடுத்துவிட எவ்வளவோ முயன்று பார்த்தார்கள். ஆயின் அவர்கள் பாடு வீணாயிற்று. நவம்பர் 4உ அன்று மாலை அவ்வூர் சட்டசபை மெம்பர் அவர்களின் தலைமையில் கூட்டம் கூடியது. முன்னாள் கல்வி மந்திரி மனோஹர் சிங் மேதா, ராமநாராயண சாஸ்திரி, ஸ்ரீமதி சாவித்திரி தேவி, ஷாந்திபாயி படேல் முதலியோர்கள் தீய சுவரொட்டி களின் இன்னல்களை விளக்கினார்கள். ஸ்ரீ தாதாபாயி நாயிக் அவர்கள், சினிமாப் படங்களையும் சுவரொட்டி களையும் பற்றியதன்று இந்த இயக்கம். பொது மக்கள் தங்கள் கண்கள் முன்பு தோற்றம் கொடுக்கும் படங்கள் சில வரம்புகளுக்குட்பட்டவையா யிருக்க வேண்டுமென்று சொல்ல உரிமை பெற்றவர்கள். அவர்கள் உரிமைகள் நிலைக்கவே இப்போராட்டம் என்று சொன்னார். அவர் மக்கள் அமைதியாக இருக்க வேண்டுமென்பதை வற்புறுத்தி துடுக்காக எதையும் செய்யக்கூடாதென்பதை எச்சரித்தார். அவர் அனைவர் உதவியையும் கோரிக்கொண்டு அனைவருக்கும் ஆசீர் வாதம் செய்தார்.

சனிக்கிழமை (5உ) காலை நான்கு மணிக்கு நண் பர்களுடன் அவர் மண்டலில் பிரார்த்தனை செய்துவிட்டு சத்தியாக்ரக இடத்திற்கு வெளிக்கிளம்பினார். அவர் ராஜவாடே அடைந்து அங்கிருந்து ஒரு ஊர்வலக் கூட்டத்துடன் சத்தியாக்ரக ஸ்தானத்தை அடைந்தார். அங்கிருந்து இரயிலடியை அடைந்தார்கள். அங்கே ஆபாச சுவரொட்டி ஒட்டப்பட்டிருந்தது. ஏணி வைத்து சுவற்றில் ஏறி சுவரொட்டி கிழித்தெறியப் பட்டது. தாதாபாயி அதற்கு வேத மந்திரங்களுடன் தீவைத்து அதை சாம்பலாக்கினார். ஆபாச சுவரொட்டி களை எதிர்த்து சத்தியாக்ரகம் ஆரம்பமாயது இப்படி.

அணித்தே இராஷ்டிரபதி அவர்கள் இந்தூர் விஜயம் செய்தார்கள். அது சமயம் மத்ய பிரதேச சர்வோதய மண்டலும் மஹிளா சங்கங்களும் அவர்களுக்கு அளித்த வரவேற்பு பத்திரங்களில் சினிமா விளம்பரப் படங்களைப் பற்றிய கோரிக்கைகளும் சேர்க்கப்பட்டன.

1. தெருக்களிலும் முச்சந்திகளிலும் பெரிய எழுத்துக்களும் படங்களும் கூடிய விளம்பரங்கள் ஒட்டப்படுகின்றன. அவை பாதையில் செல்வோர் அனைவர் நோக்கையும் பற்றும் வகையில் அமைகின்றன. இவ்வாறு ஒட்டப்படும் விளமபரங்கள் மக்களின் மரியாதைக்கும் சீலத்தின் வரம்புகளுக்கும் பொருந்தும் வகையில் இருக்க வேண்டும். இன்று மிகவும் தாழ்ந்த விளம்பரங்களே ஒட்டப்படுகின்றன என்பதை வருத்தத்துடன் சொல்லிக் கொள்ள வேண்டியிருக்கின்றது. அவை மக்களின் சீலத்தேய்விற்கு வழி செய்வனவாக அமைகின்றன. கல்வி பயிலச் செல்லும் இளைஞர்களும் சிறுமிகளும் பாடசாலைகள் வீடுகள் இவைகளில் போதிக்கப்படும் நியதிகளை உடைத் தெரியும் ஊக்கம் பெற இப்படங்கள் உதவுவனவாக உள்ளன.

2. இன்று தாங்களாக பணம் கொடுத்து பார்க்க மக்கள் திரளும் படங்களையும் பரிசீலனை செய்வது முறையாக இருக்க, தெருவழி செல்வோர் கட்டாயமாகப் பார்க்க அமையும் இச் சுவரொட்டிப் படங்களுக்கு தணிக்கையே இல்லையா? கண் காட்சி சாலைகளிலும் ஆபாசமான படங்களும் உருவங்களும் அநுமதிக்கப் படுவதில்லை. ஒருவர் அச் சாலைகளுக்குச் சென்று அவைகளைப் பார்க்க வேண்டும், இப் படங்களோ பொதுமக்கள் நடமாடும் இடங்களிலேயே ஒட்டப்படுகின்றன. இந்த ஆபாச விளம்பரங்களை வழிச்செல்வோர் பார்க்கும்படி கட்டாயப் படுத்தப்படுகின்றார்கள்.

3. இந்தியாவின் பண்பாடு பெண்மையையும் தாய்மையையும் போற்றுவதாகும். கல்யாணத்துடன் தொடங்கும் இல்வாழ்க்கை பாராட்டப்படுகின்றது. இல்லறம் வாழ்க்கையின் முக்கியப் படியாக அமைகின் றது. இப் பண்பாட்டை உதறித் தள்ளி பெண்ணை போக சாதனமாக விளம்பரப்படுத்துவது இழிவா னது. இவைகள் வளர நாம் வாளா நின்றால் நம் பண் பாட்டின் சிறப்பில் மக்கள் நம்பிக்கையும் ஆர்வமும் கொள்ளாத காலம் வந்துவிடும். மக்கள் நியாயம், மரி யாதை இவைகளைப்பற்றிப் பேசுவதில் பயனில்லை என்ற எண்ணம் பெற்றவர்களாகின்றார்கள். பொது இடங் களில் ஒட்டப்படும் விளம்பரங்களில் நேர்மையும் சீல மும் நிறைந்த பகுதிகள் பொருந்த வேண்டும்.

4. இன்று விநோபாவடிகள் இப் பிரச்னையை முன் னிட்டுள்ளார். அவர் இந் நகரில் ஆபாச சுவரொட்டிக ளில்லாமல் பார்ப்பது இந் நகர் வாசிகளது கடமை என்கிறார். அவர் சினிமாக்காரர்கள், விளம்பரம் வரை வோர் இவர்களுடைய குழு ஒன்றை நியமித்துள்ளார். அக் குழு எந்த சுவரொட்டியைப் பொருந்தாது என்று முடிவு செய்கின்றதோ அதை ஒட்டக் கூடாது என் றும் முடிவு செய்யப்பட்டிருக்கின்றது. ஆனாலும் சட்டத் தால் கூடாததானாலும் மக்கள் தாங்களே தீய சுவ ரொட்டிகளை அகற்றி அதனால் வரும் கஷ்டங்களை இனி மையாக ஏற்றுக்கொள்ள வேண்டியது தான் என்று சொல்லியுள்ளார். அவர் தன் வருத்தத்தை இவ்விதம் வெளியிடுகின்றார்: "எதுவரை நம் தெருக்களிலும் முச்சந்திகளிலும் இத்தகைய ஆபாசப் படங்கள் இருக் கின்றனவோ அதுவரை குழந்தைகளுக்குபாலுணர்ச்சிப் பாடங்கள் கட்டாயமாகவும் இலவசமாகவும் கொடுக்கப் படுகின்றது என்று கொள்ளலாம். பாடசாலைகளில் கொடுக்கப்படும் கல்வி பயனற்றதாகும். சமுதாய திருத் தப் பாடங்களும் வீணாகும்."

மக்களாட்சி முறையில் அரசாங்கம் தாளுகவே மக்களின் மேம்பாட்டைக் கருதி ஒரு செயல் முறை வகுக்க வேண்டாமா? இல்லேயேல் மக்கள் நம்பிக்கை யிழந்து, சத்தியாக்ரகத்தை கையாளத் துணிய மாட்டார்களா?

இத்தகைய சுவரொட்டிகளைத்தடைசெய்ய சட்டங்கள் செய்யவேண்டும். உள்ள சட்டங்களே உபயோகித்து அவைகளைத் தடைசெய்ய அதிகாரிகளுக்கு உத்திரவுகள் கொடுக்கவேண்டுமென்று நாங்கள் தாழ்மையுடன் வேண்டிக்கொள்கின்ருேம். ஒரு நல்ல இல்வாழ்வோன் தன் மனைவி மக்களுடன் எந்தப் படத்தைப் பார்க்க வெட்கப்படுவாஞே அத்தகைய படம் ஆபாசமானதாக கருதப்படும் வகையில், ஆபாசம், சீலத்துடன் பொருந்தாதது என்பதற்கு விளக்கம் கொடுக்கப்படவேண்டும். தங்களைப்போன்ற ஒரு சத்புருஷர் எங்கள் வேண்டுகோள்களை ஏற்று சீலக்குறைவிற்கு வழிவிடாது காப்பாற்றுவீர்கள் என்று நாங்கள் திடமாக நம்புகிருேம்" என்று தம் பத்திரத்தை அவர்களிடம் சமர்ப்பித்தார்கள்.

ராஷ்டிரபதி அவர்களின் பதில்

"விஞேபாவடிகள் இந்தூரை ஒரு சர்வோதய கேந்திரமாக்கி இங்கும் சர்வோதய சாதனைகளை உருவாக்க விரும்புகின்ருர் என்பதைக் கேள்விப்பட்டேன். அவர் இந்த நகரம் சுத்தமான பட்டணமாக வேண்டுமென்று கொள்கின்ருர். புறத்தூய்மை மட்டும் போதியதன்று. ஆகையாலேயே அவர் கெட்ட படங்களும் இங்கு தோற்றம் அளிக்கக்கூடாதென்று சொல்லியுள்ளார். நீங்களும் இவ்வழியில் சிந்தனையை செலுத்த வேண்டும். இக்காரியம் இரண்டு வழிகளில் நடக்கலாம். ஒன்று கெட்ட சுவரொட்டிகளை அதை ஒட்டியவர்களே அகற்றிவிடலாம், அல்லது மக்கள் பார்க்காமல் இருக்கலாம். இருவரும் அவரவர்கள் கடமையைச் செய்யட்டும். எல்லாம் சுத்தமாக இருக்கவேண்டுவது.

அனைவரையும் சுத்தமாக ஆக்கவேண்டுமென்பது முனிசிபாலிடியின் கடமை.

இறுதியில் ராஷ்டிரபதி அவர்கள் "இந்நகரை வெளியினின்று வந்து பார்ப்பவர்கள் வியக்கும் வகையில் இதை சுத்தமாகச் செய்வீர்களென்று நம்புகின்றேன்" என்ருர்.

"லம்பே ஹாத்" சுவரொட்டி இருந்த இடத்தில் இரண்டு சின்ன சுவரொட்டிகள் காணப்பட்டன. அவைகளும் அகற்றப்பட்டன. சர்வோதய மண்டலம் சினிமா முதலாளிகளுடன் நகரம் முழுதும் ஒட்டப்பட்டுள்ள சுவரொட்டிகளை அகற்ற வேண்டிக்கொண்டார்கள். முதலாளிகள் அவைகளை அகற்ற சம்மதம் கொடுக்காததால் மீண்டும் சத்யாக்ரகம் செய்வது அவசியமாயிற்று. அவைகள் அகற்றப்பட்டன.

இச்சுவரொட்டி கிளர்ச்சியால் இந்தூரில் ஒரு புது ஊக்கம் தோன்றியது. அதுமுதல் சர்வோதய பாத்திரம் முதலிய பிற திட்டவேலைகளும் பெருகிவருகின்றன. இந்தூரிலிருந்து ஆறுமைல் தூரத்தில் கஸ்தூரிபாய் நிதியின் கேந்திரம் உள்ளது. பல சகோதரிகள் அங்கிருந்துகொண்டு அரிய சேவைகளை ஆற்றிவருகின்ருர்கள். அந்த கேந்திரம் சாந்திசேனை வேலையை மேற்கொள்ளத் தீர்மானித்திருக்கிறது. அவர்கள் இந்தூர் நகரத்திலும் தம் வேலைகளைச் செய்ய சங்கற்பித்துள்ளார்கள்.

இந்தூரில் நடந்த இந்த சத்யாக்ரகத்தின் செய்தி நாடெங்கும் விரைவாகப் பரவியது.



## நான்காம் அத்தியாயம்

# சுவரொட்டி இயக்கம் பரவுகிறது.

"ஒருவன் ஒரு கோட்டையைத் தாக்குவதானால் முதலில் அதன் வெளிப்புறத்தைத் தாக்குகின்றான், பிறகே கோட்டைக்குள் புகுகின்றான். இதற்குள் நாடுமுழுதிலும் இந்த காரியம் முடிந்தேறியிருக்க வேண்டுமென்பது என் அபிப்ராயம். எவ்வளவு பட்டணங்கள் உள்ளன, எவ்வளவு சுவர்கள் அவைகளில் உள்ளன, அவைகளெல்லாம் இன்று சுத்தமடைந்திருக்குமென்று நம்புகின்றேன். இன்று விஞ்ஞான காலம். ஹநுமான் இந்த வேலை செய்யவில்லையா ? இலங்கையை எப்படி எரித்தார்? ஒரு வீட்டிலிருந்து தாவி மற்றொரு வீட்டின் மேல் பாய்ந்தார். ஒருவர் இந்தூரிலிருந்து கிளம்பினால் கான்பூர், நாகப்பூர், ஹைதராபாத், முதலிய பல நகரங்களுக்கும் இவ்வியக்கத்தைப் பரப்பவேண்டாமா ?"

—வினோபா.

இவ்வியக்கம் இந்தூரிலிருந்து கிளம்பி நாடு முழுதிற்கும் பரவி வருகின்றது. இந்தி மொழி பிரதேசத்தில் இது அதிகமாகப் பரவியுள்ளது இந்தி மொழிப் படங்களும் அப்படங்களின் சுவரொட்டிகளும் பிற மொழிகளைவிட மோசமான நிலையில் அமைந்துள்ளன. பெரும்பாலும் இந்தியில் பார்க்கத் தகுந்த நல்ல படங்கள் வருவதேயில்லை. ஆகையாலேயே மத்யபிரதேசம், உத்திரப் பிரதேசம், பீஹார், இராஜஸ்தானம் முதலிய மாகாணங்களிலேயே இவ்வியக்கம் விரைவாகப் பரவி வருகின்றது.

### வாராணசி (காசி)

அஸ்ஸாம் செல்லும் வழியில் அடிகள் வாராணசியில் ஆறுநாட்கள் தங்கிச் சென்றார். சர்வசேவா சங்கத்தின்

கேந்திராலயமும் காசியிலே அமைந்துள்ளது. டிஸம்பர் 15உ கூட்டத்தில் அடிகள் காசிவாசிகளை ஆபாசப் படங்களை அகற்ற கேட்டுக் கொண்டார். சுத்தம், மதுவின்மை, தீய சுவரொட்டிகளை நீக்குதல் இவைகளால் காசி, சுத்தமான க்ஷேத்திரமாக வேண்டுமென்று சொன்னார்.

அடிகள் வருவதற்கு முன்பே ஆபாசச் சுவரொட்டிகளை அகற்றும் விஷயமாக கூட்டம் கூட்டப்பட்டது. சினிமா முதலாளிகளும் சர்வோதயக் காரர்களும் கலந்து பேசினார்கள். முதலாளிகள் இனி சர்வோதயக்காரர்கள் ஏற்றுக்கொள்ளும் சுவரொட்டிப் படங்களையே பொதுத் தெருக்களில் ஒட்ட ஒப்புக் கொண்டார்கள். ஜனவரி 19-உயன்று ஒரு பெரிய ஊர்வலம் கிளம்பி மௌனமாக சர்வோதய கேந்திரத்திற்குச் சென்றது. அங்கிருந்து டவுன்ஹால் சென்று அங்கு இராம நாம கோஷங்களுடன் கூட்டம் கலைந்தது. அது அரியதொரு காட்சி. காசியில் எல்லா நிர்மாணத் தொண்டர்களும் இவ்வேலையில் கலந்து கொள்கின்றார்கள்.

### கான்பூர்

உத்திரப் பிரதேசத்தில் இதுவே பெரிய நகரம். சுவரொட்டி இயக்கம் இங்கும் பரவியது. ஒரு நூறு பிரமுகர்கள் கையெழுத்திட்ட ஒரு விஞ்ஞாபனம் வெளியிடப்பட்டது. அந்நகரின் உபதலைவர் சிவநாராயண் டண்டன் உப்பு சத்தியாக்ரகத்தைப் போன்ற ஒரு அடிப்படை பிரச்னையை ஒட்டி இவ்வியக்கம் எழுவதாக தான் கொள்வதாயும், இவ்வுயரிய காரியத்தில் தன் தலைவர் அவர்களது உதவி பூராவும் கிட்டுமென்று நம்புவதாகவும், அடிகளுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். 22உ ஜனவரியன்று சர்வோதய சங்கத்தார் ஜில்லா கலெக்டரைக் கண்டு பேசினார்கள். அவர் சீக்கிரத்தில் ஆபாசப் படங்களை அகற்ற ஏற்பாடு செய்வதாயும்

சொன்னார். பிறகு சர்வோதய மண்டல் ஊரிலுள்ள பெரிய வித்வான்களைக் கொண்டு ஒரு தணிக்கை செய்வித்தது. அவர்கள் எச்சுவரொட்டியை ஆபாசமானது என்று முடிவு செய்தார்களோ அதை முதலாளிகளே அகற்றி விட்டார்கள்.

### ஆக்ரா

இயக்க சம்பந்தமாக ஆக்ராவில் அரிய வேலை நடந்துள்ளது. காலேஜ் ஹைஸ்கூல்களில் கூட்டங்கள் நடத்தி ஆபாச சுவரொட்டிகளைப்பற்றி விளக்கங்கள் கொடுக்கப்பட்டன. முதலாளிகள் விளம்பரக்காரர்களின் கூட்டங்களைக் கூட்டி சுவரொட்டிகளின் தீமைகள் விளக்கப்பட்டன. நகரிலுள்ள பூரா சுவரொட்டிகளையும் கணக்கெடுத்து பரிசீலனை நடத்தப்பட்டது. பெரிய கூட்டங்கள் கூட்டப்பட்டு விஷயம் தெளிவாக பொது மக்களுக்கு விளக்கப்பட்டது. இவ்வழிகளில் இயக்கத்திற்கு மக்கள் ஆதரவு பேரளவில் சேகரிக்கப்பட்டது. ஒரு முதலாளியிடம் ஆபாச சுவரொட்டி யொன்றை அகற்ற கோரப்பட்டது. முதலாளி மறுத்ததின் பேரில் ஜில்லா கலெக்டருக்கும் முதலாளிக்கும் அச் சுவரொட்டி சத்யாக்ரக முறையில் ஜனவரி 5உ அகற்றப்படும் என்று தெரிவிக்கப்பட்டது. ஆனால் ஜனவரிக்குள் முதலாளியே அதை அகற்றிவிட்டு அவ்விடத்தில் வேறொரு சுவரொட்டியை ஒட்டியிருந்தார்.

ஜனவரி 5உ யன்று சர்வோதய அலுவலகத்தில் ஒரு பத்திரிக்கை நிருபர் கூட்டம் கூட்டப்பட்டு சர்வோதயக்காரர்களின் மகிழ்ச்சி தெரிவிக்கப்பட்டது. பிற இடங்களில் "மொகலே ஆஜம்" "பர்சாத் கி ராத்" என்ற படச்சுவரொட்டிகளை எடுக்க முதலாளிகளுக்கு கோரிக்கை அனுப்பப்பட்டது. கோரிக்கைப்படி அச் சுவரொட்டிகள் முதலாளிகளால் அகற்றப்பட்டன. பூரா நகரிலுள்ள அப்படச் சுவரொட்டிகள் அகற்றப்பட்டது

சிறப்பாயது. 'பர்சாத்' படத்தில் சுவரொட்டி 7உ வரை அகற்றப்படவில்லை. அன்று சர்வோதயத் தொண்டர் களும் பிறரும் சுவரொட்டி இருந்த இடத்திற்குப் போனார் கள். அவர்கள் மக்களிடம் அச்சுவரொட்டியின் ஆபா சத்தை சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே முதலாளி அதை அகற்றிச் சென்றார். அங்கிருந்து கலெக்டர் கச்சேரி முன் சுவரொட்டியுள்ள இடத்திற்குப் போனார் கள். அங்கு ஈராயிரம் மக்கள் குழுமியிருந்தார்கள். இரு சர்வோதயத் தலைவர்கள் அச்சுவரொட்டியின் மேல் மை கொட்டி அதை கிழித்தெறிந்தார்கள். அதற்கு மேல் அச்சுவரொட்டியின் முதலாளிகள் பூரா நகரத்திலும் ஒட்டப்பட்ட சுவரொட்டிகளை தாமே அகற்றினார்கள். இவ்வியக்கத்தை ஒட்டி ஆக்ராவில் 139 கூட்டங்கள் நடைபெற்றன. கடைகளில் வைக்கப்பட்டிருந்த சுவ ரொட்டிகளும் எடுக்கப்பட்டன. முதலாளிகளும் தொண்டர்களுடன் கூடி வேலை செய்ததையும் குறிப்பிட வேண்டியது அவசியமாகின்றது.

லக்னோ

லக்னோவில் டிஸம்பர் மாதமே ஆபாச படங்களை அகற்ற பொதுமக்களுக்கு வேண்டுகோள் விடுக்கப் பட்டது. 5உ ஜனவரியன்று சமூகத் தொண்டு செய்யும் பல சங்கங்களின் ஒரு தூதுகோஷ்டி டெபுடி கமிஷ னரை சந்தித்தது. சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் ஸ்ரீ திருலோக சிங்கு அவர்களும் கோஷ்டியில் இருந்தார் கள். முதலாளிகளுடன் தான் கலந்து பிரச்னையைத் தீர்ப்பதாக அதிகாரி சொன்னார். சுவரொட்டிகளை ஒட்டுவதற்கு மூன்று நாட்களுக்கு முன்னால் அவைகளை போலீஸ் அதிகாரியின் தணிக்கைக்கு அனுப்ப வேண்டு மென்று போலீஸ் அதிகாரி முதலாளிகளுக்கு அறிக்கை யனுப்பினார். அப்படி செய்யத் தவறினால் குற்றமாகும் என்பதும் அவர்களுக்கு விளக்கப்பட்டது.

## மீரட்

டிஸம்பர் 11உ சர்வோதயத் தொண்டர்களின் கூட்டம் நடந்தது. ஒரு பொது கமிட்டி நிறுவப்பட்டது. ஸ்ரீ ஆர்ய சமாஜ், மீரட் லேடீஸ் கிளப், இவர்கள் தங்கள் கூட்டங்களில் ஆபாசச் சுவரொட்டிகளை எதிர்த்து தீர்மானங்கள் நிறைவேற்றினார்கள்.

## முராதாபாத்

பல கூட்டங்கள் நடந்தன. பற்பல சங்கத்தார்கள் தங்கள் தங்கள் கோரிக்கைகளைப் பிரசுரித்தார்கள். ஜனவரி 10உ ஒரு பெரிய ஊர்வலம் நடந்தது. மைதானத்தை அடைந்து அங்கு மாபெரும் கூட்டம் ஒன்று நடைபெற்றது. மீண்டும் 31உ யன்று ஊர்வலம் நடைபெற்றது. அச்சமயம் ஆபாசச் சுவரொட்டிகள் சுவர்களிலிருந்து அகற்றப்பட்டு தீயில் கொளுத்தப் பட்டன.

## அலஹாபாத்

இங்கு இயக்கம் ராஜரிஷி டாண்டன்ஜீ அவர்களின் ஆதரவைப் பெற்றது. அவர் மெய்நலம் குன்றிய முதுமையிலிருந்தாலும் அச்சுவரொட்டிகளைத் தன்னிடம் கொணரச் சொன்னார். அவைகளைப் பார்த்து பெருந்துயரடைந்து சர்வோதய மண்டலிற்கு கீழுள்ள செய்தியை அனுப்பினார். "இப்படங்கள் உற்பத்தி செய்யப்படுவதும் காட்டப்படுவதும் நாட்டிற்கு பெருந் தீமையை விளைவிப்பதாக உள்ளது. அவைகளை முற்று மாக மாற்றிவைக்கவேண்டுமென்று எனக்குப் படுகின்றது. அவைகளைப் பார்க்கும் இளைஞர்கள் யுவதிகள் இவர்கள் எப்படி மாற்றமடைகின்றார்கள் என்பதையே நாம் பார்க்கவேண்டும். அவர்கள் சீலம் என்னாகின்றது. அவர்களைப் படங்களாலும் நடிப்புகளாலும் கிளப்பி விடுவது சிறந்ததா? அவர்களது ஆர்வம் நல்ல காரியங்களுக்காக அன்றோ திருப்பப்படவேண்டும்?

கேவலம் பாலுணர்ச்சி வழி அவர்களைத் தட்டிவிடுவது பெருந் தீமை, இழிவானது.

"இப்படங்களை விளம்பரப்படுத்தும் சுவரொட்டிகளைப் பற்றி வினோபாவடிகள் அனைவர் கவனத்தையும் இழுத்துள்ளார். சில சீலத்தைக் குலைப்பதாயும், சில ஆபாசமானவையாயும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அப்படங்களை விளம்பரங்களில் பதிப்பது முறையன்று. அதைத் தடுக்க அடிகள் ஒரு இயக்கம் தோற்றுவித்துள்ளார். முதலாளிகள் இதற்கு குறுக்கிடாமல் இருப்பதன்றி, தங்கள் விளம்பரங்களில் ஆபாசத்தை அகற்றவும் வேண்டும். இது ஒரு பெரிய விஷயம், சிறியதன்று. உண்மையில் உணர்ச்சிகளைத் தூண்டவுள்ள படங்களையே காட்டலாகாது. நாட்டு மக்கள் அனைவரும் அக்கோரிக்கையை விடவேண்டும். கேந்திர ஆட்சியில் மந்திரி இது விஷயத்தை கவனித்து ஆபாசப் படங்களை பிரசுரிக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்பது என் கோரிக்கை" என்பது செய்தி.

அலஹாபாத்தில் பல தெருக்களிலும் கூட்டங்கள் நடந்தன. சுவரொட்டிகளையும் காலண்டர்களையும் அவர்களே கொணர்ந்து எரிக்கவேண்டுமென்று கேட்கப்பட்டது. மாஜி ஹைகோர்ட்டு நீதிபதி அவர்களின் தலைமையில் ஒரு கூட்டம் நடந்தது. தலைவரால் கொண்டுவரப்பட்ட அடியிலுள்ள தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

"படங்களும் விளம்பரச் சுவரொட்டிகளும் உள்ள நிலை வருந்தத்தக்கது. அதனால் இளைஞர்கள், யுவதிகள், குழந்தைகள் இவர்களின் சீல வாழ்வு பாதிக்கப்படுகின்றது. இல்வாழ்க்கையே குலைக்கப்படுவதாகின்றது. மேம்பாட்டு முறையில் மக்களை ஊக்காமல் பொது நலம் சீலம் இவை தேய்க்கப்படுகின்றன. சமுதாய வாழ்வு குலைவுறுகின்றது. பட உற்பத்தியாளர் இன்றுள்ள

படங்களை மாற்றி நற்போதனை மிகும் படங்களையும், மக்களை நல்வழிகளில் ஊக்கும் படங்களையும் உற்பத்தி செய்ய வேண்டிக் கொள்கின்றது. மாகாண கேந்திர அரசாங்கங்களை இந்த சபை இப்பிரச்னையின் அவசியத்தை உணரவும், தீமைப் பகுதியைக் களைய அவசியமாகும் நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவும் வேண்டுகின்றது" என்று தீர்மானித்தது.

"அச் சபை சினிமா முதலாளிகளை ஆபாசமான சுவரொட்டிகளைத் தாங்களே எடுத்துவிடவும், இனி அவைகளை ஒட்டுவதை நிறுத்திவிடவும் வேண்டிக் கொள்கின்றது. போலீஸ் அதிகாரிக்கும் அதே விண்ணப்பம் செய்துகொள்ள ஒரு தீர்மானம் நிறைவேறியது. ஆபாசமுள்ளவையா என்பதை நிர்ணயிக்க ஒரு கமிட்டியும் நியமிக்கப்பட்டது.

ஜனவரி 26ல சர்வகலாசாலை, பிற கல்லூரி மாணவர்கள் ஒரு கூட்டமாக கூடினார்கள். அவர்கள் இந்த இயக்கத்தை வரவேற்றதுடன், இளைஞர்கள் படங்களைப் பார்ப்பதால் சீல வளர்ச்சியும், நல்லுணர்வும் பெறும் வழியில் படங்களை உற்பத்தி செய்ய முதலாளிகளை வேண்டிக் கொண்டார்கள். அரசாங்கமும் ஆபாச படங்களையும் சுவரொட்டிகளையும் தடைசெய்ய வேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள்.

இவையன்றியும் ஸஹரன்புரம், ஆஜம்கட், தேராதுன், புலந்தஷஹர், மதுரா, பிரோஜமபாத் முதலிய நகரங்களிலும் இயக்கம் பரவி வருகின்றது.

பீஹார் மாகாணம்

25 ஜனவரியில் பாட்னாவில் ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. அதில் இயக்கத்தை கொண்டுசெலுத்த ஒரு கமிட்டி நிறுவப்பட்டது. கல்வி அதிகாரிகள், நகரசபையின் அங்கத்தினர்கள், நிர்மாணத் தொண்டர்கள் இவர்கள் கூடினார்கள். அவ்வழி பிரசாரம், மக்கள் தொடர்பு,

நகர போலீஸ் அதிகாரிகளின் ஆதரவைப் பெறுதல், சினிமா முதலாளிகளுடன் தொடர்பு பெறுதல் இந் நான்கு வேலைகளும் தீர்மானிக்கப்பட்டன. சர்வோ தயத் தொண்டர்கள், ஆபாச படங்கள் சுவரொட்டிகள் இவைகளை எதிர்த்து ஒரு ஊர்வலம் நடத்தினார்கள். இறுதியாக ஒரு கூட்டம் கூடி அதில் ஆபாசப் படங்களை சட்டத்தைக் கொண்டு தடை செய்ய அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளப்பட்டது. நகரத் தலைவர்கள் சினிமா முதலாளிகளுடன் தொடர்பு கொண்டார்கள். சுவ ரொட்டிகளைப்பற்றி அவர்களுடன் விவாதித்தார்கள்.

பாட்னாவைப் போன்று கடிஹார், ஸமஸாரம், சப்ரா, தன்பாத் முதலிய நகரங்களிலும் இயக்கவேலை விரிந்து வருகின்றது. பீஹார் மாகாணத்தில் பதினாறு பட்டணங்களில் இயக்கக் கமிட்டிகள் நியமிக்கப்பட்டுள் ளன. பெண்களும் அவைகளின் அங்கத்தினர்களாக உள்ளார்கள்.

இராஜஸ்தான் எல்லையிலும் பல நகரங்களில் சுவ ரொட்டிகளை எதிர்த்து ஒலி எழுந்துள்ளது. ஜய்பூர், ஜோத்பூர், ஆஜ்மீர், உதயபூர் முதலிய நகரங்களில் இயக்கம் பரவியுள்ளது. சில இடங்களில் முதலாளி களின் கூட்டுறவும் கிடைத்துள்ளது.

மத்ய பிரதேசம்

இந்தூரில் நடந்த இயக்கம் மாகாணத்து நகரங் களையெல்லாம் பற்றியுள்ளது. போபாலில் எல்லா அரசியல் கட்சிக்காரர்களும் பூதான ஊழியர்களும் சேர்ந்து ஆபாசப் படங்களை எடுக்க வேண்டிக் கொண் டார்கள். ஆபாச இலக்கியத்தையும் தடைசெய்ய அவர் கள் அரசாங்கத்தை வேண்டிக் கொண்டார்கள். ஜனவரி 5-ல் குவாலியரில் பெண்கள் சங்கங்கள், சர்வோதய பூதானத் தொண்டர்கள், நிர்மாண வேலை

தொண்டர்கள் இவர்களின் கூட்டம் ஒன்று நடைபெற்றது. ஆபாசமான படங்களளவையென்று நிர்ணயிக்க ஒருகமிட்டி நியமிக்கப்பட்டது.

ராய்பூரில் ஒரு பொதுக்கூட்டத்தில் இயக்கத்தை கொண்டு செலுத்த தீர்மானிக்கப்பட்டது. மேலும் ஆபாசப் படங்களையே பரிசீலிக்கவும் ஆபாச சுவரொட்டிகளைத் தடைசெய்யவும் அரசாங்கம் வேண்டிக்கொள்ளப்பட்டது. ஊரிலுள்ள ஆபாச சுவரொட்டிகளை நிர்ணயிக்க டிசம்பரிலேயே ஒரு கூட்டம் கூடியது. பல முதலாளிகள் ஆபாசச் சுவரொட்டிகளை ஒட்டுவதில்லையென்று வாக்குறுதி கொடுத்தார்கள். தங்கள் முழு ஆதரவையும் இயக்கத்திற்குக் கொடுப்பதாக வாக்குறுதியும் கொடுத்தார்கள். இராமகிருஷ்ண மடத் தலைவர் இயக்கத்தில் பேரக்கறை கொள்கின்றார். மத்யபிரதேச பிற நகர்களிலும் இவ்வியக்கம் பரவிவருகின்றது.

### பஞ்சாப்

ஹிஸ்ஸார் ஜில்லாவில் ஆபாச சுவரொட்டிகளை அகற்ற ஒரு பொதுக்கூட்டம் ஜனவரி 9உ யன்று கூட்டப்பட்டது. சுவரொட்டிகள்போன்ற பிற ஆபாசமானவைகளையும் அவர்கள் எதிர்த்தார்கள். ரெட்கிராஸ் வருஷாந்திர விழாக்களில் பெண்களின் நடனம், அதிகாரிகள் தங்கள் கிளப்புகளில் மதுபானம் செய்வது இவைகளும் கண்டிக்கப்பட்டன.

பிரோஜ்பூரில் ஆர்ய சமாஜ் வாராந்திர சத்சங்க கூட்டத்தில் ஆபாச சுவரொட்டிகளை அகற்ற தீர்மானிக்கப்பட்டது. நகரில் சர்வோதய பெண்கள் கூட்டம் நடந்தது. தெருக்களிலும் சந்துகளிலும் சென்று அங்கு ஒட்டப்பட்டுள்ள ஆபாச சுவரொட்டிகளை அகற்ற தீர்மானிக்கப்பட்டது. ரோஹத் நகரிலும் இயக்கத்திற்குப் பொருத்தமான வேலை மேற்கொள்ளப்பட்டது.

## குஜராத்

அஹமதாபாத் முனிசிபல் கமிட்டியார் இப் பிரச்னையை விவாதித்து ஒருமனப் பட்டவராய் சினிமா படங்களில் சீலக்குறைவிற்கு வழிவிடும் பகுதிகளையும் பாட்டுகளையும் தடைசெய்ய அரசாங்கத்தை வேண்டிக் கொண்டார்கள். சூரத்தில் கூடிய மஹிளா சம்மேளனத்தில் இது விவாதிக்கப்பட்டது. சுவரொட்டிகளிலும் படங்களிலும் பெண்மையைக் கேவலமாக சித்தரிப்பது கண்டிக்கப்பட்டது. சீலத்திற்கு அழிவு வருவதைத் தடுப்பது அவசியமென்று கொள்ளப்பட்டது. பாவ்நகரிலும் ஆபாசப் படங்களையும் சுவரொட்டிகளையும் அகற்ற பொது ஜன அபிப்ராயத்தைத் திரட்ட முயற்சி செய்யப் பட்டது.

## மகாராஷ்ட்ரம்

பம்பாயில் 29 ஜனவரியன்று வாயி ஹாலில் ஆபாச சுவரொட்டிகளைப் பற்றி முதல் கூட்டம் கூட்டப்பட்டது. அதில் நகரசபைத் தலைவர், மாகாண சட்ட மந்திரி, பூதான பரிஷத்தின் தலைவர் ஒரு ஹைகோர்ட்டு நீதிபதி அவர்கள் பிரசன்னமாயிருந்தார்கள். ஆபாச சுவரொட்டிகளாலும் படங்களாலும் சீலக் குறைவு ஏற்படுவதற்கு வருந்தி அவைகளை அகற்ற மக்கள் ஆர்வத்தைக் கோரித் தீர்மானம் செய்யப்பட்டது. இவ்வியக்கத்தைக் கொண்டு செலுத்த ஒரு கமிட்டியும் நிறுவப்பட்டது. தாணாவில் சுவரொட்டிகளால் உண்டாகும் தீமையைத் தடுக்க அவைகளை உடனே தடுக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. தூலியாவில் பெண்களே பெரும்பாலும் நிறைந்த ஒரு பொதுக்கூட்டம் கூடி சுவரொட்டிகளினால் சமுதாயத்தின் நியதித் தாழ்வையும் சீலக் குறைவையும் கண்டு அனைவரும் வருந்த வேண்டியுள்ள நிலையை விளக்கியது. சில பெண்கள் ராதா கிருஷ்ணப் படங்களையும் சங்கர பார்வதிப் படங்களை

யும் கூட திரித்து வெளியிடுவதையும் தடுக்கவேண்டு மென்று சொன்னார்கள். ஒரு முதலாளி தன் சுவரொட்டிகளை கோயில்களில் ஒட்டுவதில்லையென்றும் ஆபாசச் சுவரொட்டிகளை எங்கும் ஒட்டுவதில்லை என்றும் சொன்னார். இப்பொழுது நாகப்பூர் முதலிய நகரங்களிலும் இவ்வியக்கம் பரவி வருகின்றது.

### வங்காளம்

நாட்டின் பெரிய நகரமாகும் கல்கத்தாவில் ஜனவரி 9ம் தேதி இவ்வியக்க சம்பந்தமாக முதல் கூட்டம் நடந்தது. நகரசபையின் தலைவர் அவர்கள், பிரச்னை மகத்தானதென்றும் தம் நகரில் சீலத்திற்கு புறம்பானதும் ஆபாசமானதுமான படங்கள், சுவரொட்டிகள் இருக்கக் கூடாதென்றும் சொன்னார். சுவரொட்டிகளில் நல்லவையே சுவர்களில் இடம் பெறவேண்டுமென்றார். இயக்கத்தை அங்கு மேற்கொள்ள ஒரு கமிட்டி நியமிக்கப் பட்டுள்ளது. அதில் மேயர் அவர்களும் இடம் பெறுகின்றார்கள்.

கேரளத்திலும் பாரத சேவக் சமாஜ் காரர்கள் சுவரொட்டிகளை எதிர்த்து ஒலி கிளப்பியுள்ளார்கள். அவர்கள் இத்தகைய படங்களை காட்டாமல் தடைசெய்ய வேண்டுமென்று அரசாங்கத்தை கோரியுள்ளார்கள்.

### டில்லி

நாட்டின் தலைநகராகும் டில்லிக்கும் இயக்கம் பரவியுள்ளது. கேந்திர அரசாங்கமும் இப்பிரச்னையை ஆராயத் தொடங்கியுள்ளது. படமுதலாளிகளும் சிந்தனையிலாழ்ந்துள்ளார்கள் தராகஞ்சு என்ற பகுதியில் ஒரு ஆபாச சுவரொட்டி இருந்தது, அகற்றப் பட்டது.

காந்தி நினைவு நிதியின் காரியதரிசி ஸ்ரீ இராமசந்திரன் அவர்கள் இவ்வியக்கம் புதியதொரு திருப்பமென்று அதை வரவேற்று அவ்விஷயத்தைப் பற்றி ஆராய்ச்சிகளைத் தொடங்கியுள்ளார்.

## ஐந்தாம் அத்தியாயம்

# பெண்களின் கூக்குரல்

*"இல்வாழ்க்கையின் மதிப்பு பாராட்டப்படுவதில்லை: அதன் மதிப்பு தேய்கின்றது. அதன் அடிப்படை இடித்துத் தள்ளப்படுகின்றது. ஆகையாலேயே நான் சுவரொட்டிகளைப் பற்றி ஆழ்ந்து யோசனையிலாழ்கின்றேன். இந்த நாட்டில் யார் சீலத்தை காப்பாற்றப் போகின்றார்கள்? சகோதரிகளே முன் வரவேண்டும். சாந்தியை நிலைக்கச் செய்வதையும் சீலத்தைக் காப்பதையும் அவர்களிடமே நான் ஒப்படைக்கின்றேன்."*

**—வினோபாவடிகள்.**

லோகமான்ய திலகர் இந்நாட்டின் தர்மத்தைப் பெண்களே காப்பாற்றியுள்ளார்கள் என்று சொன்னார். அவர்களே வாழையடி வாழையாக நம் தர்மத்தை ஊட்டிவளர்த்துள்ளார்கள். அவர்களினுடைய ஆர்வமே வாழ்க்கையை வலிவுடையதாக்கியுள்ளது.

### இல்வாழ்க்கையின் அடிப்படை.

பெண்மணி இல்வாழ்க்கையின் அடிப்படை. இல்லாளில்லாவிட்டால் இல்வாழ்க்கையுமில்லை. வாழ்க்கையின் நான்கு ஆஸ்ரமங்களிலும்—நிலைகளிலும்—இல்வாழ்க்கை நிலையே முக்கியமானதென்று கருதப்படுகின்றது. இல்வாழ்வானே, துறந்தார்க்கும் துவ்வாதார்க்கும் துணையாக நிற்பவன். இல்வாழ்வான் நல்வழியில் முயன்று பொருளைப்பெற்று, தானும் வாழ்ந்து, விருந்தினரை ஓம்பி சமுதாய மேம்பாட்டிற்கு வருவாயின் ஒரு பகுதியைக் கொடுக்கவேண்டியவன். இதனாலே இல்வாழ்க்கை உயர்நிலையை அடைகின்றது. அக்னி சாட்சி

யாக ஆடவனும் பெண்ணும் ஒருவரையொருவர் வாழ்க்கைத் துணையாக ஏற்று தங்கள் வாழ்வை நிறையுள்ள தாக்குகின்றார்கள்.

நாட்டில் பல பல கலவரங்கள். அதனால் பெண்கள் நான்கு சுவர்களுக்குள்ளாக நின்றுவிட்டார்கள். அதனால் கிருஹலக்ஷ்மி இன்று அடுப்பங்கரை வேலைக்காரியாயுள்ளாள், பெண்மை வலிவு பெற்றவளை நாம் இன்று பலமற்ற அபலையாக்கியுள்ளோம். அவள் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளவும் புருஷனை நம்பி வாழ வேண்டி வந்துள்ளது. வானப்பிரஸ்த முறையும் மறைந்துவிட்டதால் பெண்கள் நிலை மாற்றமடைந்தது.

காந்தியடிகளின் கொடை

பெண்களும் இப்பொழுது விழிப்புப் பெற்று வருகின்றார்கள். ஸ்வாமி விவேகானந்தர், தயாநந்தர் அவர்களைத் தட்டியெழுப்பி உள்ளார்கள். காந்தியடிகள் அவர்களிடம் மறைந்துகிடந்த ஆத்ம சக்தியை வெளிக்கொணர்ந்திருக்கிறார். அவர்கள் சுதந்திரப் போராட்ட காலத்தில் விழிப்புபெற்று அரிய சேவையை ஆற்றியுள்ளார்கள். இன்று நாட்டு வாழ்க்கையில் அவர்களுக்குத் தக்கதோர் இடம் அமைந்துவிட்டது. பிறருக்குத் தொண்டாற்ற வானப்ரஸ்தத்தை ஏற்க அவர்களைத் தூண்டியுள்ளார். அவர் குடும்ப வாழ்க்கையில் நின்றுகொண்டும் பொதுத் தொண்டாற்றுவதற்கு உதாரணமாக விளங்கியுள்ளார். அவ்வழி இல்வாழ்க்கையில் புனிதமும், ஒளியும் தோன்றுகின்றன, பொதுத்தொண்டும் தூய்மையை அடைகின்றது.

ஆயின் இன்று நாகரீகத்தின் பெயரால் பல வழிகளில் இல்வாழ்க்கை தாக்கப்படுகின்றது. சினிமா, சினிமா சுவரொட்டிகள், படங்கள், பேஷன், இவைகள் பல வழிகளில் உடல் வனப்பை குலைக்கின்றன. இதினின்று உடலை வளர்ப்பதும் அதைத் தொழுவதுமே

வாழ்க்கையின் பயனுக ஆகிவிட்டன. அகத்தூய்மையை விட்டு புறவலங்காரம் செய்துகொள்வதிலேயே மக்களின் நாட்டம் ஊக்கப்படுகின்றது. சுவரொட்டிகளின் விஷமம் பிறவற்றினும் அதிகமாக அமைகின்றது. சுவரொட்டிகளைப் பார்ப்பதால் ஏற்படும் மனமாற்றம் யாது என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. தாய்மை என்னும் புனித உணர்ச்சியையே அழிக்க இவை அணிவகுக்கின்றன.

பெண்ணைத் தாயாகக்கொண்டு பார்ப்பதும் உறவாடுவதும் இந்நாட்டுப் பண்பாடு. உடல் ஒன்றுபடுவதை ஒருவரையொருவர் தொடுவதை—நம் பண்பாடு ஆதரிப்பதில்லை. பெண்ணைத் தொடுவது கண்டிக்கப்பட்டுள்ளது. ஐரோப்பா, அமெரிக்கா முதலிய மேனுடுகளில் ஆடவரும் பெண்டிரும் சேர்ந்து கூத்தாடுவது வழக்கத்திலுள்ளது. அவர்கள் சூழ்நிலை வேறுபட்டிருக்கலாம், ஆயின் நம் ஆன்ரூேர்கள், பதஞ்சலி முனிவர் "பரேஹி அஸம்ஸர்க" என்று பிறரைத் தொடுவதை கண்டித்துள்ளார்.

பிறரைத் தொடுவதினின்று, பிறருடன் பழகுவதை நம்மவர்கள் ஆதரித்துள்ளார்கள். மேனுட்டார் கையை குலுக்குகின்ருர்கள். நாம் கைகூப்பி வணங்குகின்ரேம். நாம் மாலை போடுகின்ரேம். அவர்கள் பூச்செண்டுகளைக் கொடுக்கின்ருர்கள். செண்டு பல மலர்களைப் பிணைப்பதாலாவது. மாலையில் மலர்கள் தனித்தியங்குகின்றன. நாம், ஆத்மா உடலினின்றும் வேறுபட்டது, நிலையானது என்று கொள்கின்ரேம். நாம் மேனுட்டு சுவரொட்டிகளை ஏற்பதற்கில்லை. அவை நமக்கு ஆபாசமாகப் படுகின்றன.

### துஃக்கத்தைக் கொடுக்கும் படங்கள்

நம் தாய்மார்களுக்கும் சகோதரிகளுக்கும் தீய சுவரொட்டிப் படங்கள் எவ்வளவு துன்பத்தைக் கொடுக்

கின்றன என்பதைப்பற்றி ஒரு சகோதரி எழுதுகின்றார். இன்று வியாபார விளம்பரங்களில் பெண்ணுரு பல வாறு திரிக்கப்படுகின்றதால் அவர்களின் கௌரவமும், தன் மதிப்பும் மிகவும் பழுதடைகின்றன. பெண்ணை ஒரு போக சாதனமாகத் திரித்துக் காட்டுவது எவ்வளவு இழிவானது! அப்படங்கள் காம வேட்கையைக் கிளப்பு வதாக உள்ளன. விளம்பரப் படங்களில் பெண்ணின் கழுத்து பல்வரிசை முதலிய மர்ம பகுதிகள் சித்தரித்துக் காட்டப்படுவது எவ்வளவு குறைவுபாடானது. உலகை ஊட்டும் மார்பைக் காட்டத் துணியும் இழிதகைமை மனிதருக்கு உண்டாகலாமா?

பீடி விளம்பரக்காரர்கள் பெண்கள் உடை அணி வித்து பையன்களைப் பெண்களைப் போல நர்த்தனம் செய்விப்பதை நாம் பார்க்கின்றோம். விளம்பரத்திற் காகப் பெண்ணை இப்படி இழிப்பது பொருந்துவதா? தன் மகள், நாட்டுப் பெண் இவர்களது படங்களை இப்படி வெளியிட எவர் துணிவார்கள்? மனித உணர்வை உயர்த்துவதாக, இந்நிலைக்கு அதைத் தாழ்த்துவதா என்பதே எழும் கேள்வி. இப்புனிதத் தொண்டில் ஈடுபடுகின்ற புருஷர்கள் தங்கள் மனைவிமார் களுடனும் பத்து குழந்தைகளுடனும் இந்த கலாவிநோ தத்தைக் கண்டு மகிழ்ச்சி அனுபவிக்கின்றார்களா? அது தான் கலாரசிகப் பான்மையா? இந்த திரிபுகளைக் கண்டு அவர்கள் மனங்கரைய வேண்டுமா?

## இல்வாழ்க்கையின் அடிப்படை என்னுவது?

இந்த படங்கள், சுவரொட்டிகள் இவைகளைப் பார்க் கும் மக்களுக்கு பெண்களிடத்து கௌரவ புத்தி ஏற் படுமா? தாய்மையும் அதன் சிறப்பும் அற்றுவிடாதா? தாய்மை யின்றேல் இல்வாழ்க்கை இருப்பதெப்படி? அதன் அடிப்படையே வெட்டப் படுகின்றது. அடிகள் :

" இன்று இல்வாழ்க்கையின் மூலவேர் வெட்டப்படு கின்றது. தூய்மை, கருணை இரண்டின் மேல் அமைவது இல்வாழ்க்கை. பதி பத்னி இவர்கள் தூய்மையான சம்பந்தம் பெறுகின்றார்கள். அதனாலேயே இல்வாழ்க்கை நடைபெறுகின்றது. சீதாராம் ராதாகிருஷ்ண என்று சொல்லப்படுவதேன்? துளசிதாசர் ஆடவன் பெண் இவர்கள் சேர்க்கை ஈஸ்வர தத்துவத்துடன் பொருந்துவது என்கிறார். இல்லறத்தின் தூய்மை மாசுறுகின்றது. பெண்கள் நேர்வழியினின்று பிறழ்கின்றார்கள். சமுதாயம் தாய்மார்களை இழித்து கண்டபடி திரித்த படங்களை வெளியிடுகின்றது. பெண்கள் தான் எப்படிப் பொறுத்துக்கொண்டிருக்கின்றார்கள்?" என்று கூறுகின்றார்.

இல்வாழ்க்கை குலையுமாயின் சீலம் பறந்தோடிப்போம்

இந்தூரில் 25 செப்டம்பர் அன்று அடிகள் பேசும்பொழுது இப்பிரச்னையைப் பெண்கள் ஏற்று பரிகரிக்க வேண்டுமென்று சொன்னார். " சாந்தியைக் காப்பது, சீலத்தை காப்பது என்ற எண்ணங்கள் எனக்கு எழவும் சுவர்கள்மீது இராப்பகலாகத் தோற்றமளிக்கும் இச்சுவரொட்டிகளின் சிந்தனை உண்டாயிற்று. சீலத்தைக் காக்க பெண்களன்றோ முன்னணிக்கு வரவேண்டும். நம் தாய்மார்கள் சகோதரிகள் இவர்களின் படங்கள் எப்படி இழித்து வரையப்பட்டுள்ளன? (கண்ணீர் வடித்தார்) வழியில் நாம் ராவணனின் பொம்மையைப் பார்த்தோம். ஆயின் நகரின் சுவர்கள் பலவற்றிலும் பல இராவணர்கள் தோற்றமளிக்கின்றார்கள். இழிந்த படங்களை இரசிப்பவர்கள் அவைகளை தங்கள் வீடுகளில் வைத்துக் கொள்ளட்டும். வெளியே அவைகளைக் காட்டி பிறர்கண்களை புண்படுத்துவானேன்? சகோதரிகளே இப்பணியை ஏற்றுக்கொள்ளவேண்டும், அவர்களிடமே நான் இதை ஒப்படைக்கின்றேன். அவர்கள்

தங்கள் வீடுகளில் சர்வோதய பாத்திரங்களை வைத்துக் கொள்ளட்டும், எங்காவது பூசலுண்டாவதாயின் அங்கு சென்று சாந்திசேனை வேலையைச் செய்யட்டும். சீலம் எங்காவது இழிக்கப்பட்டால் அதை எதிர்த்து நிற்கட்டும்" என்று பேசினர்.

இந்தூரில் பெண்களே இவ்வேலையை ஏற்றுக் கொண்டுள்ளார்கள். இந்தூர் அகல்யாபாயின் க்ஷேத்திரம். ஐந்தாந் தேதி அகற்றப்பட்ட சுவரொட்டிகளை மீண்டும் முதலாளிகள் ஒட்டினார்கள். உடனே அந்நகரத்தின் பெண்கள் ஸ்தாபனங்களின் கூட்டம் ஒன்று கூடி "இவ்வூரில் எந்தத் தெருவிலும் பெண்கள் சங்கோசமற்று நடந்து செல்லவுள்ளதாகவேண்டும். எந்த சுவரொட்டியைப் பார்த்தாலும் கண்ணை மூடாமல் செல்லும்படி அவை அமையவேண்டும். ஆகையால் பெண்ணுருவை மனம்போனபடி திரிக்கலாகாது, அவ்வுருக்களுடன் விளம்பரங்கள் அமைதல் கூடாது" என்று தீர்மானித்தார்கள்.

இந்தூரில் அவர்கள் மீண்டும் கூடி மஹிளா சங்கடன் என்ற ஒரு கூட்டு அமைப்பை நிறுவினார்கள். அப்பொழுது அவர்கள் "இக்கூட்டம் விநோபாவடிகளின் இந்தப் புனித இயக்கத்தைப் பாராட்டுகின்றது. சினிமாத்தொழில் காமவுணர்ச்சியை எழுப்பும் படங்களையும் பாடல்களையும் படங்களில் சேர்க்கலாகாதென்றும், ஆபாச விளம்பரச் சுவரொட்டிகளை ஒட்டக்கூடாதென்றும் தீர்மானிக்கின்றது. அணித்தே தாங்களாகவே முதலாளிகள் ஆபாசச் சுவரொட்டிகளையும் படங்களின் தீய பகுதிகளையும் அகற்றி அனைவருடைய ஆதரவிற்கும் பாத்திரர்கள் ஆவார்கள் என்று நம்பப்படுகிறது" என்று தீர்மானங்கள் செய்யப்பட்டன. இனி காலண்டர் படங்கள் தயாரிப்பவர்கள் சீலக்குறைவற்ற படங்களைத் தயாரிக்க மாட்டார்களென்று நம்புகின்றோம் என்பதும் தீர்மானமாக நின்றது.

பெண்களின் சங்கங்கள் "இன்று சினிமா முதலிய விளம்பரங்களும் சில வரம்புகளை ஏற்றுக்கொள்ள வேண்டும். இன்று வரம்புகளேயில்லை. அதிலும் சினிமா விளம்பர சுவரொட்டிகளை உடனடியாக சீர் செய்வது அவசியமாகின்றது. ஆகையால் தணிக்கைக்காக நியமிக்கப்பட்டுள்ள கமிட்டி எச்சுவரொட்டிகளை ஆபாசமானவை என்று கொள்கின்றதோ அவைகளை அகற்றியேயாகவேண்டும். அக்காரியத்தை இச்சபை ஆதரிப்பதுடன் அதற்கு வேண்டிய கூட்டுறவைக் கொடுக்கவும் தயாராக உள்ளது. அங்கத்தினர் யாருக்கும் ஏதாவது ஆபாசமானதாகப் பட்டால் அதை கமிட்டியாருக்குச் சொல்லி அதை அகற்ற முயற்சி செய்ய வேண்டும்" என்று தீர்மானித்தது.

இந்தூர் பெண்மணிகள் உற்சாகத்துடனும் அக்கரையுடனும் இவ்வியக்கத்தை ஏற்றுக்கொண்டுள்ளார்கள். பல ஊர்வலங்கள், பெருங்கூட்டங்கள் இவைகளை ஏற்பாடு செய்து தங்கள் தீர்மானங்களை வெளிப்படுத்தியுள்ளார்கள். இந்தூரில் அதன் காரணமாகப் பொது அபிப்ராயம் சாதகமாக திரண்டுள்ளது.

அகில இந்திய மஹிளா சம்மேளனமும் தன் முற்றுய ஆதரவைக் கொடுக்கும் தீர்மானம் செய்துள்ளது.

ஆக்ராவில் இவ்வியக்கவேலையை பெண்களே சிறப்பாகச் செய்துள்ளார்கள். பெண்கள் கோஷ்டிகள் வீடு வீடாகச் சென்று அரிய பிரசாரம் செய்து வருகின்றூர்கள். அவர்கள் இருபத்துநான்கு மணி நோட்டீஸ் கொடுத்தார்கள். ஒரு முதலாளி காலவரையறைக்குள் சுவரொட்டியை அகற்றினர். மற்ருருவர் அப்படி செய்யாததால் சத்தியாக்ரகம் செய்து அது அகற்றப்பட்டது கான்பூரிலும் பெண்கள் கமிட்டியே இவ்வேலையைத் தீவிரமாகச் செய்கின்றது. பஞ்சாப் ரோஹ்தக்கில் பெண்களே தீவிரமாக இப்பணியை ஏற்றுள்

ளார்கள். நாட்டில் பலவிடங்களிலும் பெண்கள் எழுச்சியுடன் இந்த பிரச்னையைத் தீர்க்க முயன்று வருகின்றூர்கள்.

ஒரு நடிகை சொல்வது என்ன?

படங்களில் நடிக்கின்றவர்களின் அபிப்ராயம் தான் என்ன என்று நாம் கேட்போம். இந்தூரில் எரிக்கப் பட்ட சுவரொட்டியிலுள்ள படத்தைக் காட்டி அதைப் பற்றி அவர் என்ன சொல்லுகின்றூர் என்று கேட்டேன். குமாரி நாஜ் என்பவரே அவர். அவர் ஒரு நிருபரிடம் இந்தூரில் நடக்கும் சுவரொட்டி எரிப்பு இயக்கத்தை தான் ஆதரிப்பதாகச் சொன்னூர். அவைகள் அழிக்கப் படவே வேண்டும். மேலும் அவர் "லம்பேஹாத்" படத்தின் சுவரொட்டியில் தன்னையும் நடிகர் மகமத்தையும் நெருக்கி படம் எடுத்திருப்பதாயும் அதனுல் தனக்கு வருத்தமேயென்றும் சொன்னூர். லம்பேஹாத் பிரளியைப் பார்க்கவே அவர் இந்தூர் வந்திருந்தார். அவர் "லம்பேஹாத்" படத்தில் விளம்பர படங்களில் தன்னியக்கங்களாக காட்டப்படுவதெல்லாம் தன்னுடையதல்லவென்றும், படம் தயாரிப்பவர்கள் தலைவி, தலைவன் அவர்கள் தனித்தனியாக கொடுத்துள்ள சாயல்களை பொருத்துவதால் தயாரிக்கப் படுபவை என்றும் சொன்னூர். அவர் முறையற்ற சாயல்களையும் உடைகளையும் ஏற்றுக்கொள்வதில்லையென்றும், பம்பாய் சினிமா நடிகர்கள் சங்கத்தினர் இவ்விதம் திரிக்கப்படுவதை தடைசெய்வார்களென்று சொன்னூர். அவர் மேலும் நடிப்பவரின் சம்மதமின்றி அவரை விளம்பர்ப்படுத்துவதால் பொதுமக்கள் நடிகர்கள் மேல் வெறுப்பையே அடைவார்கள் என்றும் சொன்னூர்.

குமாரி நாஜ் அவர்களின் தாயாரும் இந்தூர் வந்திருந்தார். அவர் இப்படி ஆபாசமாக தன் பெண்ணைச் சித்தரித்துக் காட்டுவதை வெறுக்கவே செய்தார்.

ஸ்ரீமதி ரெஹனு சகோதரி ஒரு முதிய தேசத் தொண்டர். அவர் 'மங்கள் பிரபாத்' என்ற பத்திரிக் கையில் ஒரு கட்டுரை இவ்விஷயமாக எழுதியுள்ளார். "விதேசித் துணிகளை சத்தியாக்ரக இயக்க காலத்தில் எரிக்கும் பொழுது உண்டான உணர்ச்சியே ஆபாசச் சுவரொட்டிகளை எரிக்கும்பொழுதும் உண்டாகின்றது. விதேசித்துணிகளை எரித்து நாம் அடிமைத்தளையை மானசீகமாக அகற்றினேம். நம் தியாகத்தையும் உள் ளொளியையும் பெற்று நின்றேம். இன்று சுவரொட்டி எரிப்பு நேர்மையை நாம் ஏற்பதைக் குறிக்கும். சில விஷயத்தில் நம் அடிமைத்தளையை நாம் அகற்றும் முயற்சியே இது." என்று எழுதுகின்றார். மேலும் " இவ்வியக்கத்திற்கு மக்களின் முழு ஆதரவும் வலிவு மிருக்கின்றன இத்திய சுவரொட்டிகளால் கெட்டுப் போன நம் மக்களின் தாய்மார்களும் தகப்பனார்களும் இயக்கத்தை ஆதரிப்பார்கள். யானையின் துதிக்கை யைப் பிடித்து நாம் அதைக் கட்டுப்படுத்த முடியாது. அது நம்மை வீசியெறியும். சுவரொட்டிகளை அழித் தால் படங்களின் ஆபாசங்களும் அற்றுப்போம்" என்று எழுதியுள்ளார்.

வினேபாவடிகள் சுவரொட்டிகளைப் பற்றி கவலை யுறுவது இந்தியத் தாய்மார்களின் கவலையே யாகும். தாய்மை விழிப்புப் பெற்றுவிட்டது. ஆபாசப்படங்கள் மறைந்தே போகும் என்பது உறுதி.



## ஆறும் அத்தியாயம்

## காலத்தின் கோரிக்கை

*"விஞ்ஞான யுகத்தில் பழைய அரசாங்கம் எவ்வளவோ பழமையானதாக ஆகியுள்ளது, அதை நாம் கைவிட வேண்டியதுதான். இனி மனிதன் முன்னேற உள்ளவன் இல்லையேல் பல புது பிரச்னைகள் தோன்றும், பழயனவும் பரிஹரிக்கப் படாமல் அப்படியே இருக்கும். உலகம் வேறு புதிய வழியொன்றை நாடி நிற்கின்றது. அது கிடைத்தால் எல்லாம் சரியாகிவிடும் என்று கொள்கின்றது. வேதாந்தம், விஞ்ஞானம் நம்பிக்கை இவைகளால் உலகம் அமைதியையும் நிறைவையும் நிச்சயமாகப் பெறும்."*
— **விநோபாவடிகள்.**

இன்று விஞ்ஞான உலகத்தின் காலம் என்று சொல்லப்படுகின்றது. இன்று விஞ்ஞானம் உலகை ஒரு குடும்பம் போலாக்கியுள்ளது. நாம் ஒருவரையொருவர் நெருங்கி நிற்கின்றோம். நம் தொடர்புகளும் விரிந்து வருகின்றன. ஒரு காலத்தில் இங்கிலாந்திலிருந்து இந்தியா வர ஆறுமாத காலம் பிடித்தது. இன்று ஒரே நாளில் அப்பிரயாணத்தை செய்து முடிக்கலாம். பஸிபிக் மகா சமுத்திரம் சீனு ஜப்பான் போன்ற தேசங்களை அமெரிக்காவினின்று பிரித்து வைத்தது, இன்று அதுவே அவைகளை பிணைக்கின்றது. இமாலயம் சீனுவையும், இந்தியாவையும் முன்பு பிரித்து நின்றது; இன்று ஒன்ருகக் கூட்டிவைக்கின்றது. விஞ்ஞான யுகத்தில் வசுதேவ குடும்பம் உருவாகி வருகின்றது.

விஞ்ஞானம் அதன் வழியே வளர வேண்டும், இல்லையேல் எல்லாவற்றையும் அது அழித்தே தீரும்.

விஞ்ஞானத்தை ஊக்க வேதாந்தமே வலுப்பெற்றது. நாம் நம்பிக்கையை இழந்துவிட்டால் நம் உறவுகள் முறிந்து அழிவு சம்பவங்கள் தோன்றும். விநோபா வடிகள்: "வேதாந்தம் விஞ்ஞானம் நம்பிக்கை இவை பொருந்தி நின்றால் சாந்தியும் நிறைவும் உண்டாகும். வேதாந்த மென்றால் இன்றுள்ள கற்பனைகள் கையாளப் படுபவைகள் இவைகளின் இறுதி என்பது பொருளாகின்றது. சமயங்கள் சாதிகள் இவைகளின் பெயரில் திகழ்கின்ற வேறுபாடுகள் ஒழிய வேண்டும். விஞ்ஞானம் என்பது 'சயின்ஸ்' (Science). மூன்றாவது நம்பிக்கை" என்று விளக்கம் கொடுக்கின்றார். இவை மூன்றும் சரிநிலையில் பொருந்தவில்லையானால் மனித சமுதாயத்திற்கு எதிர்காலமில்லை. அமைதியும் நிறைவும் பெற உலகத்திற்கு மூன்றும் இணைந்து படுதல் வேண்டும். அரசியலையோ சமயாசாரங்களையோ மாற்றி யமைத்துக் கொள்ள உரிமை வேண்டும். இன்றைய மக்களாட்சி முறையில் ஒவ்வொருவருக்கும் ஒரு வாக்கு கிடைத்துள்ளது. திறன் நிலை இவை வேறுபட்டிருப்பினும் அனைவருக்கும் ஒரு சமமான வாக்குரிமை கொடுக்கப்பட்டுள்ளது. ஏன்? ஆன்ம அறிவு ஒன்றே என்னும் தத்துவத்தை போதிக்கின்றது. அனைவரிடத்தும் உள்ள ஆத்மா ஒன்றேதான். வேறுபாடுகள் புறத்தே அமைவன. எல்லோரிடத்தும் பிரகாசிக்கும் ஒளி ஒன்றே தான்" என்று சொல்லுகின்றார்.

எல்லா சமயங்களும், நேர்மையைப் பற்றி நில், நேர்மையாக நடந்துகொள், பிறருக்கு உதவு, அயலானையும் உன்னைப் போலவே நேசம் செய் என்று சொல்லுகின்றன. அரசியல் தத்துவங்களும் சமுதாயம் ஒன்றுபட்டு இயங்க வேண்டும், அனைவரும் நல்லெண்ணத்துடன் பிறருடன் இயங்கவேண்டுமென்று சொல்லுகின்றன. ஆனாலும் மனிதன் தன்னலத்தால்

தூண்டப்படும் பொழுது பாடுபடுகின்ருன் என்பது எப்படி என்ற கேள்வி எழுகின்றது. நல்லுறவும், நல்லெண்ணமும் எதற்கு? கூடியுறவாடுவானேன்? இவைகளுக்கெல்லாம் விடை வேதாந்தம் தான் கொடுக்க வல்லது. வேதாந்தம் ஒரே தத்துவம் எங்கும் நிறைகின்றது, அதனுல் பிறர் நலத்தை, சமுதாய நலத்தை நாடுவதில் தன்னலமும் இருக்கின்றது என்பதைச்சொல்லுகின்றது. இந்நிலேயில் பரஸ்பர அவநம்பிக்கைக்கு நியாயமேயில்லே. இந்த ஆத்மஞான மின்றேல், க்ஷேமலாப அரசாங்கம், கூட்டுறவு முறை சோஷலிசம், கம்யூனிசம் இவைகளால் பயனில்லே. அப்பலவும் இரசமற்ற பழங்களேப் போலவே நிற்கும். இனி நாம் நிறுவ விரும்பும் சமுதாயத்தின் அடிப்படை இந்த ஆத்மஞானம். அதன் மேல் கட்டிடம் விஞ்ஞானம், நம்பிக்கைதான் அதன்மேல் பறக்கும் கொடியாக அமரும்.

## இளேஞர்களின் பொறுப்பு

இந்த புதுவெள்ளப் போக்கை செவ்வனே நாம் அறிதல் வேண்டும். இதினின்று இளேஞர்களுக்கு அதிகப் பொறுப்புள்ளதை அறிந்துகொள்ளலாம். அவர்கள் அதிகமாகப் படிக்கவும் சிந்திக்கவும் வேண்டும். மேஞடு கீழ் நாடு, பண்டைய இன்றைய சிந்தனே இவைகளே அவர்கள் ஆராய்ந்து ஒரு முடிவிற்கு வரவேண்டும். அரும்பாடுபட்டு நாட்டின் சுதந்திரத்தைப் பெற்றவர்களே சமுதாயத்தை சீரமைக்க வேண்டுமென்று கொள்வது அநியாயமாகும். அவர்களின் அநுபவம், நுண்ணறிவு, அவர்கள் ஆசீர்வாதம் இவைகளேப் பெற்று, இளேஞர் பயனடைய வேண்டும். சிலர் பழைய வாசனேகளுடன் அமைபவர்களும் இவர்களுடன் கூட வரலாம். ஆனுலும் இது ஒரு புது திருப்பமாகவே அமையும்.

## பட முதலாளிகளின் கடமை

அரசியல் அதிகாரத்தில் அமைபவர்கள் இன்றைய நிலைக்கொப்ப எழுவது தம் கடமையென்பதை உணர்தல் வேண்டும். பொதுத் தொண்டை ஏற்றுக் கொள்ளும் சகோதரர்களும் சகோதரிகளும் அவர்களுக்குத் துணை நிற்கவேண்டும். இம்முறையில் பட முதலாளிகள் தங்கள் பொறுப்பை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். இன்று சினிமா ஒரு செல்வாக்கு பெற்ற தொழில். சமுதாயம் மேலெழவும் தாழவும் இருவழிகளுக்கும் உதவ பட முதலாளிகள் வேலை செய்யலாம். அவர்கள் ஆழ்ந்து சிந்தித்து தங்கள் பொறுப்பை உணர்வார்களாக. வேறுநாடுகளில் கூட அவர்கள் தங்கள் நிலையை சமுதாயத்துடன் பொருத்தி வைத்துக் கொள்கின்றார்கள்.

## அமெரிக்க சுப்ரீம் கோர்ட்டின் புது தீர்ப்பு

படங்களை நிர்மாணிப்பதில் அமெரிக்கா வழிகாட்டியாக நிற்கின்றது என்று கொள்ளப்படுகின்றது. நம் படங்களிலும் தலைவன் தலைவி முதலிய விஷயங்களில் அமெரிக்காவைப் பின்பற்றி நிற்கின்றோம். அமெரிக்கா இந்தியாவைவிட பன்மடங்கு வளம்பெற்ற நாடு, தனி நபர் வருமானத்தில் நாமெங்கே அவர்களெங்கே? அமெரிக்க சுப்ரீம் கோர்ட்டின் ஒரு தீர்ப்பை நம்மவர்கள் அறியவேண்டி அதைத் தருகின்றேன்.

வாஷிங்டனில் 1961 ஜனவரியில் கொடுக்கப்பட்ட தீர்ப்பு இது. நியூயார்க்கு சினிமா கம்பெனி ஒன்று சிகாகோ நகரில் ஒரு படத்தைக் காட்ட அனுமதி கோரியது. சிகாகோ அதிகாரிகள் தாங்கள் முதலில் தணிக்கை செய்து குறைபாடுகளை நீக்கிய பிறகு அனுமதி தருவதாகச் சொன்னார்கள். பட முதலாளி அதை ஏற்க மறுத்தார். விவகாரம் வளர்ந்து சுப்ரீம் கோர்ட்

டின் தீர்ப்பிற்குப் போவதாயிற்று. அந்த உயர்ந்த நீதி மன்றம் சிகாகோ மாகாண அதிகாரிகளுக்கு படத்தைத் தணிக்கை செய்ய அதிகாரம் உண்டு என்று தீர்ப்பளித் துள்ளது. ஒன்பது நியாயாதிபதிகளில் நால்வர் தணிக்கை அவசியமில்லை என்று கொண்டனர், பெரும் பான்மையாகும் ஐவர் தணிக்கை அவசிய மானதென்று முடிவு செய்தார்கள். ஆகையால் படங் களைத் தணிக்கை செய்வதில் பெரும்பான்மை ஆதரவு இருக்கவே செய்யும். அமெரிக்காவில் நியூயார்க், கன்ஸாஸ், மேரிலண்டு, வர்ஜீனியா ஆகிய மாகாணங் களில் முதல் தணிக்கை உண்டு. சிகாகோ முதலிய பதினொரு பட்டணங்களிலும் முதல் தணிக்கை யுண்டு.

பிறநாடுகளில்

நாகரீக ஸ்வர்க்கமாகும் பிரான்சு தேசத்திலும் கடுமையான தணிக்கை உண்டு என்று தெரியவருகின் றது. வெளி நாடுகளுக்கு அனுப்பப்படும் படங்களைப் பற்றி அதிக தணிக்கையும் உண்டு. வெளிநாடுகளில் பிரான்சு மக்களைப் பற்றியும் அவர் சீல நோக்குகளைப் பற்றியும் தப்பெண்ணங்கள் பரவலாகாது என்று கொள்கின்றார்கள். ஒருவர் " தணிக்கை செய்பவர்களை வீணாக நிந்திக்கலாகாது. தணிக்கை ஒரு முறை அதற்கு நாம் கட்டுப்படவே வேண்டும். ஏற்கப்பட்ட சிந்தனை, சமுதாய உறவுகள், சீலநோக்கு இவைகளைக் காப்பது இந்த தணிக்கையே. சமுதாயத் தீமைகள், அனாசாரங் கள் இவைகளினின்றும் நம்மைத் தணிக்கை காப்பாற்று கின்றது, என்றார். இங்கிலாந்திலும். படத் தணிக்கை உண்டு. தணிக்கை போர்டின் தலைவர் லார்டு மாரிஸன் சில காலத்திற்கு முன்பு இந்தியா வந்திருந்தார். அவர் பத்திரிக்கை நிருபர்களிடம் இங்கிலாத்தில் படங்கள் வரம்பை மீறிச் செல்லாமல் கவனம் கொள்ளப்படுகின்ற தென்றார். படங்களுக்கு உதவி செய்யவே அவர்களி

ருப்பினும், அவை இஷ்டப்படி செல்ல முடியாது. ஏன் படங்களை துண்டிக்கின்றீர்களென்றும், ஏன் இவ்வளவு ஆபாசங்களை அநுமதிக்கின்றீர்களென்றும் கடிதங்கள் வருவதாகவும் அவர் சொன்னார். இங்கிலாந்தில் டெலிவிஷன் திரைப்படங்களுடன் கடும் போட்டி போடுகின்றது. டெலிவிஷனிற்கு தணிக்கை யில்லை, சினிமாவிற்கு உண்டு. ஆகையாலேயே இவ்வாறு மாறுபட்ட கடிதங்கள்.

### தணிக்கை நியமங்கள்

அமெரிக்கா இங்கிலாந்து பிரான்சு முதலிய நாடுகளில் தணிக்கை உண்டென்றும், அதனால் அவரவர்கள் பண்பாட்டின் வரம்புகளைப் பாதுகாக்க முயல்கின்றார்களென்றும் வெளியாகின்றது. வெளிநாட்டார் மனோவிஞ்ஞானத்தின் அடிப்படையில் சினிமாவாகட்டும் டெலிவிஷனாகட்டும் அவைகளை ஒரு வரம்பில் வைக்க வேண்டுமென்று கொள்கின்றார்கள். இந்திய தணிக்கையாளர்களும் அப்படியே செய்வதுதான் முறையாகும். இந்தியாவின் பண்பாட்டு வரம்புகள் யாவை என்பதும் தீர்மானிக்கப் படவேண்டும். பொது மக்களின் மனோ நிலையென்ன, பள்ளிகளில் படிக்கும் இளைஞர்கள் படங்களால் எப்படி பாதிக்கப் படுகின்றார்கள் என்பதும் ஆராயப்படவேண்டும். நம் பண்பாடு மிகவும் புராதனமானது, நமக்கு கைவந்தது என்பதையும் நாம் மனதில் கொள்ளவேண்டும்.

### சினிமாக்காரர்களின் அழகிய போக்கு

சினிமா முதலாளிகள் இவ்வழியில் நோக்கம் படைத்தவர்கள் என்பது மகிழ்ச்சிக் குரியதொன்று. சினிமா முதலாளிகளின் தலைமைச் சங்கம் பம்பாயில் கூடியது. பிறநாடுகளைப் போன்று இந்தியாவிலும் முதலாளிகள் தாமாகவே தம் வரம்புகளை வகுத்துக் கொள்ளவேண்டுமென்று தீர்மானித்தார்கள். பிரசார சாதனங்களை

உயர் தலைச்சங்கத்தின் அநுமதி பெற்றே விளம்பரம் செய்யவும் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். சுவ ரொட்டிகள் 1, பெரிய விளம்பரங்கள் 2, சிறு போட் டோக்கள் 3, சினிமா ஸ்லையிட் 4, பத்திரிக்கை விளம் பரங்கள்5. இவைகள் ஐந்தையும் அத்தீர்மானம் விசேஷ மாகக் குறிப்பிடுகின்றது. அப்படித் தீர்மானித்ததற் காகப் படத்தொழிலதிபர்களை நாம் பாராட்டவேண்டும்.

அரசாங்கம் இதுசமயம் தானும் ஒன்றைச் செய்ய வேண்டும். அரசாங்கம் வாளா இருந்தாலும் மக்கள் வாளா இருப்பதற்கில்லை. அடிகள் "நம் குடி மக்க ளுக்கு எழுச்சி உண்டாக வேண்டும். அரசாங்கம் இதைப் பார்க்காது நின்றாலும் மக்கள் ஆபாச சுவ ரொட்டிகளை அகற்றியாக வேண்டும். திருதிராஷ்டிர ரென்றால் நீங்கள் சிரிக்கவேண்டியதில்லை. அதற்கு நாட்டை ஆளுபவன் என்ற பொருளும் உண்டு. அர சாங்கம் உள்ள நிலையில் மாற்றம் செய்ய விரும்புவ தில்லை. சமுதாயம் அமைதியாக இயங்குவதொன் றையே அவர்கள் விரும்புகின்றார்கள். நானே அந்த சுவரொட்டிகளை அகற்றிவிடுங்கள் என்று சொல்லுகின் றேன்" என்று சொல்லுகின்றார். இந்திய அரசாங்கம் இது விஷயமாக செயலாற்ற உள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ள வேண்டுவதாகின் றது. 1961 பட்ஜட் கூட்டத்திலேயே இது சம்பந்த மான பில் ஒன்று சமர்ப்பிக்கப்படும் என்று தெரிகின் றது. அரசாங்கத்திற்கு நாம் கடமைபட்டவர்களா கின்றோம்.

### அடிப்படை மாறுதல் வேண்டும்

ஆபாச சுவரொட்டிகளைத் தடை செய்வதுடன் அரசாங்கம் நின்றுவிடக் கூடாது. அச் சுவரொட்டி ஒரு மனப்பான்மையை வெளியிடுகின்றது. ஒரு வாழ்க்கை முறை ஒரு சமுதாயப் போக்கு இவைகளைக்

கொள்வது அவை. இந்திய அரசாங்கம் திடமாக இதை யும் ஆய்ந்து பார்க்க வேண்டும். அரசாங்கம் தன் திட் டங்கள் செயல்முறை இவைகளேயும் முற்றுமாக மாற் றும் பிரச்னேயும் எழுகின்றது. இன்றுள்ள நிலே நீடித் தால் அதன் விளைவு பயங்கரமானதாகும். இங்கிலாந் தின் பெருஞ் சிந்தனேயாளர் ஸ்ரீ வில்பெர்டு வெல்லக் என்பவர்: "இன்று மேனுடுகளில் உலாவும் உலோகா யத வாதம் தொழிற் புரட்சியின் இறுதிப் படியாக உள் ளது. இதன் விளைவு யாதாகுமென்பதை நிச்சயமாகச் சொல்லுதல் கூடுவதன்று. ஆத்மீகம் களைத்துப் போய் குன்றிவிடும், பொருளாதாரமும் உடைந்துபட்டு சிதறிப் போம். அதற்குப் பிறகு ஒரு ஆதர்சவாத புரட்சி தோன்றலாம். பிறகு மூன்ருவது உலக யுத்தம் தோன்ற லாம். பிறகு ஆத்மீக எழுச்சி உண்டாகலாம்...தொழில் மேம்பாட்டை நாடி இந்தியா செல்வது அதற்கு பெருந் தீமையாகவும் முடியலாம். தொழில் வளர்ச்சியால் நடுத் தர வகுப்பாருக்குச் சிறிது நலமேற்படலாம், ஆயின் இயந்திரத்துடன் இயந்திரமாக இயங்கும் தொழிலாளி களுக்கு இயந்திரங்களுக்கு அடிமைப்படும் நிலேயே கிடைப்பதாகலாம். அதனல் வேலேயில்லா பிரச்னேயும் தீர்வதற்கு வழியில்லே" என்று சொல்லுகின்ருர்.

### ஆத்மீகத்துடன் பொருந்தும் முன்னேற்றம்

இந்நாட்டில் வாழ்வதா மடிவதா என்ற பிரச்னே நிற்கின்றது. சீல வலிவைப் பெருவிட்டால் நாம் நிலேக்கவே முடியாது. நம் பிரதம மந்திரி பண்டித ஜவஹர்லால் இந்த உண்மையை நன்கு அறிந்து உணர்கின்ருர். ஒரு நிருபர் பேட்டியில் அவர் சொன்ன தாவது: "மனித வாழ்க்கை ஒரு புது நோக்கு ஒரு. பொருத்த நிலே இவைகளே நாடியே நிற்கின்றது. இன்றைய உலகில் நிறைந்த ஆத்ம அறிவும் சீலமும் பெற்றவன் உலகை எதிர்த்துநின்று போராடலாம்,

ஆத்மீக அறிவின்றி உலகில் முன்னேற்றம் அடைவது கூடுவதன்று'' என்று சொன்னார்.

நிருபர்: தாங்கள் சொல்லுவதைப் பார்த்தால் தாங்கள் தன் வாழ்க்கை இறுதியில் இறைவனை நாடும் ஒரு நேருவை கற்பிப்பதாகத் தோன்றுகின்றது.

நேருஜீ: ஆம் நான் மாறியுள்ளேன். சீலம், அத்யாத்மம் இவைகளைப்பற்றிய என் கருத்துகள் அனைவரும் அறிந்ததே. ஆழ்ந்த சிந்தனையின் விளைவே இது!

இத்தொண்டை யார் செய்வார்கள்? இளைஞர்களே செய்தாக வேண்டும். அவர்கள் தங்கள் சுயதர்மத்தை அறிந்துவலிவுடன் இப்பணியை ஏற்றுக்கொள்வார்கள். இன்றே அவர்களது பரீக்ஷை காலம். அவர்கள் என்ன செய்கின்றார்கள் என்று உலகம் அவர்களை உற்று நோக்கி நிற்கின்றது. இந்தியாவின் புதுப்பணியை வரும் தலைமுறையாளரே செய்தாகவேண்டும். அவர்கள் தங்கள் பகுதியைச் செய்தால் அவர்களுக்குப் பின் வருபவர்களும் தங்கள் பணியை முடித்து இந்திய சமுதாயத்தின் மேல்கட்டிடத்தைப் பூர்த்திசெய்வார்கள்.

மேனாடுகளினின்றும் நாம் தெரிந்து கொள்ள எவ்வளவோ இருக்கின்றது. ஆயின் நம் மனோதிடம் உறுதியாக வேண்டும். நல்லவற்றை எங்கிருந்தும் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆயின் நாம் அடிப்படைகளுடன் பொருந்துமளவில் அவைகளை ஏற்க வேண்டும். வெளிவேஷம் வெளிச்சம் இவைகளைக் கண்டு மயங்கி நாம் எதையும் ஏற்றுக் கொள்ளலாகாது. ஏற்கனவே ஸ்ரீ வில்பெர்டு வெல்லக் அவர்களின் அபிப்ராயத்தைக் குறித்தோம். மேலும் அவர்: ''இந்திய இளைஞர்கள் புராதன நாகரீகங்கள் பல அழிந்துபட்டுள்ளன என்பதையும், மேனாடுகளிலும் உள்ள நாகரீகம் மாறவே செய்யும் என்பதையும் மனதில் கொள்ள வேண்டும்.

இன்று மனிதன் உலகை அழிக்கக் கற்றுக் கொண்டுள்ளான், ஆயின் நிலைபெற்று வாழ அறிந்துகொள்ள வில்லை. சிந்தனையை இழந்து அத்யாத்மீக தர்சனம் பெறுவதெப்படி? அறிவு தெளிவற்றதாயின் வாழ்க்கை எப்படிக் கூடும்? நமக்கு இப்பொழுது வேண்டியது சத்தியம்–உண்மை. எத்தகைய சத்தியம்? நேரான எளிய சத்தியம். சத்தியத்தைப் பெற்றால் தர்சனம் கிடைக்கும், அதைப் பெற்றால் முன்னேற்றம் கூடும். அது அனைவருக்கும் பயனையும் மகிழ்ச்சியையும் கொடுப்பதாக அமையும்'' என்று சொல்லுகின்றார்.

ஆயின் இச் சத்தியத்தின் திறவுகோலை யார் கொடுக்கவுள்ளார்கள்? இந்தியாவின் இளைஞர்களே இதைக் கொடுக்க உள்ளார்கள். தாமதம் கூடாது. உள்ள நிலை அவர்களை அறைகூவி யழைக்கின்றது. அமைதியான இன்முகத்துடனும் சாந்தியுடனும், உறுதியுடனும் அவர்கள் தங்கள் கடமையை ஏற்றுச் செய்தல் வேண்டும்.

### வினோபாவடிகளின் துயரம்

சுவரொட்டி இயக்கத்தைக் கொண்டு இளைஞர்களை அடிகள் அளக்க நினைக்கின்றார். அவர்களது உள்ளெழுச்சியைக் காணவிருப்புகின்றார். அவர்களிடம் தன்னம்பிக்கை நிறைவதைக் காண விரைகின்றார். ஆகையாலேயே அவர்கள் ஆபாச சுவரொட்டிகளை அகற்றத் துடிதுடிக்கின்றார்.

"குழந்தை எழுத்தை அறிந்துகொள்கின்றது. கவனமாகப் படிக்கின்றது, படத்தையும் பார்க்கின்றது. பக்குவமடையாத குழந்தை இந்த ஆபாசப் படத்தைப் பார்த்தால் அதன் மனது எப்படி விகாரப்படும்? அந் நிலையில் கல்வியின் பயனென்ன? ஆகையாலேயே நான் தீவிரமாக இதைப் பற்றிச் சிந்திக்கின்றேன். என் துணைவர்கள் இவ்வியக்கத்தை நழுவவிட்டால் நான்

அஸ்ஸாமிற்குப் போகாமல் இரயிலேறி திரும்பி வரவும் நினைக்கின்றேன். சுவரொட்டி அநீதியை ஒரு நாளைக் காயினும் சகிப்பதெப்படி என்ற கவலை பெரிதாகின்றது'' என்று சொல்லுகின்றார் அடிகள்.

அவர்கள் இஷ்டப்படி தாந்தோன்றிகளாக யாரும் இந்நாட்டில் செல்ல முடியாது என்பதை சுவரொட்டி இயக்கம் நமக்குச் சொல்லுகின்றது. பூதான பத்திரிக்கையின் ஆசிரியர் சித்தராஜ் தட்டா அவர்கள் "சுவரொட்டிகளை மட்டும் பொருத்த நன்று, சிலக்கேட்டையும் மரியாதைக் கேட்டையும் எதிர்த்தே விநோபா வடிகள் தன் குரலை எழுப்பியுள்ளார். கேந்திர மாகாண அரசாங்கங்கள் பொதுவிடங்களில் ஆபாச சுவரொட்டிகளை ஓட்டக்கூடாது என்ற தடைகள் செய்து விட்டால் நம் இயக்கம் ஓய்ந்துவிடுவதன்று. சமுதாயத்தில் நேர்மை உணர்ச்சி நிலைபெறவேண்டும், சிலர் தம் இலாபத்திற்காக பிறருடைய உணர்ச்சிகளைத் தூண்டவோ, தீய பாவனைகளை உண்டாக்கவோ இடம் இருக்கலாகாது'' என்று எழுதுகின்றார்.

## ஒரு கொம்பை பிடித்தாய்விட்டது

சிலர் சுவரொட்டிகளை அழித்துவிட்டால் பெரிய சாதனை ஒன்றுமில்லை என்று கொள்ளலாம். ஒரு படை எளிதாக முதலில் வெற்றியைப் பெற்றுவிட்டால் வெற்றி மேல் வெற்றியாகவே அது முன்னேறும். அதே விதம் சீல நோக்கை நிலைநிறுத்தும் முயற்சியில் சுவரொட்டி இயக்கம் முதற்படி என்று கொள்ளல் வேண்டும். அடிகள் சொல்லுகின்றார்: "இன்று நாம் ஆபாச சுவரொட்டிகளுக்கு எதிராகத் தோற்றிய இயக்கம் சுவரொட்டியுடன் நிற்பதன்று. கெட்ட படங்கள் கெட்ட பாட்டுகள், கெட்ட இலக்கியம் இவை பலவற்றையும் எதிர்த்தே உள்ளது என்பதை நாம் அறிதல்

வேண்டும். திருடர் கூட்டத்தில் ஒருவனைப் பிடித்தாய் விட்டதென்று கொள்ளவேண்டும்'' என்கின்றார்.

இன்று இந்தியவாசிகள், குடிமக்கள், இளைஞர்கள், சிறுமிகள் அனைவரும் இவ்வியக்கத்தை வரவேற்கின்றார்கள். நம் தாய்மார்களை இழிவுபடுத்தும் வருத்தம், எளியவர்களைச் சுரண்டும் பரிதாபம், சீலத்தைக் குலைக்கும் வேதனை மூன்றும் நம்மைச் செயலில் உந்தவே செய்யும். இயக்கத்தில் இறங்கினால் நம் கடமை, பயன், நம் சுதந்திரம் இவை நமக்குச் செவ்வனே விளங்குவனவாகும்.

## இது பெரும் பிரச்னை

நாம் சுதந்திரம் அடைந்து பதின்மூன்று வருஷங்களுக்கு மேலாகிவிட்டது. நாட்டில் கொடிய வறுமை, வேற்றுமையுணர்ச்சி விஷமநிலை இவை நீடிக்கின்றன. மேலிருந்து பிறர் நமக்கு அதையும் இதையும் சொல்லிக்கொண்டேயிருக்கின்றார்கள். இந்தச் சங்கடநிலையில் நேர்மையும் மனோ வலிவும் மிகவும் வேண்டப்படுகின்றன. கல்வியோ விளையாட்டோ விநோதமோ எதுவானாலும் நம் உள்ள வலிவைக் குறைப்பதாயின் அதை விரட்டியடிக்க வேண்டும். இல்லையேல் நம் சுதந்திரம் சிறிதுகாலத்ததாக நின்றுவிடும். இந்தப் பெரிய பிரச்னை நம்முன் நிற்கின்றது. நாட்டின் சிந்தனையாளர், தலைவர்கள், ஆழ்ந்து சிந்தனை செய்யவேண்டும். நாட்டைச் சீராக நிறுவ சிறந்த அடிப்படைகள் வேண்டும். இந்த சுவரொட்டி இயக்கத்தால் இவைகளுக்கெல்லாம் வழியேற்படும்.



# அனுபந்தம்

## காந்தியடிகள் என்ன நினைக்கின்றார்?

*(19—12—1936 ஹரிஜன சேவக் பத்திரிக்கையில் எழுதிய கட்டுரையின் சாரம்)*

ஒரு மாத சஞ்சிகையில் வெளிவந்த ஆபத்திற்கிடமான ஒரு புத்தகத்தின் விளம்பரத்தை கத்தரித்து ஒரு சகோதரி அனுப்புகின்றார். சகோதரி எழுதுவதாவது:- “நான் இந்த விளம்பரத்தைப் பார்த்தேன். அது தங்களுக்கும் வருகின்றதோ இல்லையோ நான் அறிவதில்லை. அது தங்களிடம் வந்திருந்தாலும் அதைப் பார்க்கத் தங்களுக்குப் பொழுது இருந்திருக்காது என்று கொள்கின்றேன். முன்னொரு தரம் தங்களிடத்தில் ஆபாசமான விளம்பரங்களைப் பற்றி சொல்லியுள்ளேன். தாங்கள் ஒரு சமயம் இதைப்பற்றி எழுதவேண்டுமென்பது என் கோரிக்கை. எந்த புத்தகத்ததோ அதைப் போன்ற ஆபாசமான புத்தகங்கள் பல வெளி வருகின்றன. அவை பெரு வெள்ளம் போல் திரளுகின்றன. ஆயின் பொறுப்புள்ள பத்திரிக்கைகளில் இது போன்ற விளம்பரங்களை வெளியிடுவது முறையா? இதைக் கண்டுதான் மனமுருகுகின்றேன். நான் தங்களுக்கன்றி பிறர் யாருக்கும் இதைப்பற்றி எழுதமாட்டேன். இறைவன் பெண்ணிற்கு ஒரு சிறப்பாய காரியத்திற்காக கொடுத்துள்ள ஒரு உருவை காமவேட்கையைக் கிளப்ப சித்தரிப்பது எவ்வளவு இழிவானது. அதை எவ்வளவிற்குக் கண்டிப்பது. அத்தகைய விளம்பரங்களைப் பற்றி முக்கியமான பத்திரிக்கைகள், மாத சஞ்சிகைகள் இவைகளின் கவனத்தை இழுக்க ஒரு கட்டுரை எழுதுங்கள்.”

இந்த விளம்பரத்தின் ஒரு பகுதியையும் நான் இங்கு விளக்கிச் சொல்ல விரும்பவில்லை. விஞ்ஞா பனத்தைப் போன்றே ஆபாசமான மொழியும் நிறைந்ததாய் அப்புத்தகம் அமைகின்றது. இப்புத்த கத்தின் பெயர் "பெண்ணுடம்பின் சௌந்தரியம்" என்பது. விளம்பரத்தில் இப்புத்தகத்தை வாங்குவோ ருக்கு, "புதிதாக மணந்தவர்களுக்கு புது அறிவு," "சம்போகம் எப்படி செய்வது," என்ற இரண்டு புத்த கங்களும் இலவசமாக கொடுக்கப்படும் என்றுள்ளது. இத்தகைய புத்தகங்களை எழுதுவோர்களைத் தடுக்க நான் சக்தி பெற்றவனென்றோ, இத்தகைய விளம்பரங் களைப் பிரசுரிக்கும் ஆசிரியர்களின் இலாபத்தைக் குறைக்க நான் சக்தி பெற்றவனென்றோ இந்த சகோ தரி எண்ணுவதாயின் அவர் எண்ணம் வீணாவதுதான். நான் விளம்பரங்களைப் பற்றியும் ஆபாச புத்தங்களைப் பற்றியும் எவ்வளவு வேண்டிக் கொண்டாலும் அதனால் ஆவது ஒன்றுமில்லை."

சகோதரிகள் மைதானத்திற்கு வரட்டும்

கடிதம் எழுதும் சகோதரியையும் அவரைப் போன்ற பிறரையும் வேலையில் இறங்கி தம்மால் ஆவதைச் செய் யட்டும் என்று சொல்லுகின்றேன். ஒருவரை கெட்டவ ரென்று பெயரிட்டு பிறகு அவரைக் கெட்டவராக்குதல் இன்றைய வழக்கம். பெண்ணை வலுவற்றவள் "அபலை" என்று சொல்லுவதும் அத்தகைத்தே. பெண் எவ்விதத்தில் பலமற்றவள் என்று எனக்குத் தெரியவில்லை. ஆணைவிட பெண்ணிடம் மிருகத் தன்மை குறைந்துள்ளது என்றால் அது ஓரளவிற்குப் பொருந்தும். ஆணைவிட பெண் புனிதம் பெற்றவள் என்றே கொள்ள வேண்டும். கஷ்டத்தைச் சகிப்பதில் எவ்வளவு பொறுமையைக் காட்டுகின்றாள் பெண்!

### பெண் தியாகம் அஹிம்சை இவைகளின் மூர்த்தி

நான் பெண்ணைத் தியாகம் அஹிம்சை இவைகளின் மூர்த்தியாகக் கொள்கின்றேன். பெண் தன் சீலத்தையும் கற்பையும் காத்துக்கொள்ளக் கணவனை நம்பாமலிருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும், பெண்ணின் கற்பை ஆடவன் காப்பாற்றிய உதாரணம் இல்லை. அவன் அப்படிக் காப்பாற்ற முயன்றாலும் அது அவனால் கூடுவதில்லை. இராமர் சீதையின் கற்பையும் பாண்டவர்கள் திரௌபதியின் கற்பையும் காப்பாற்றியவரன்று. அவரவர்கள் தங்கள் கற்பின் வலிமையைக் கொண்டே தங்கள் சீலத்தைக் காப்பாற்றிக் கொண்டார்கள். தன் சம்மதத்துடன் ஒருவன் தன் கௌரவத்தை இழந்து கொள்வதில்லை. ஒரு மனித மிருகமாகும் ஆடவன் ஒரு பெண்ணைக் கட்டாயப் படுத்தி அவள் மானத்தை அழித்தால் அதனால் அவள் சீலம் அழிந்துவிடுவதில்லை. அதே விதம் மருந்துகளால் மயக்கமுண்ட ஆடவனை சீலமழித்தாலும் அவன் தன் சீலத்தை இழந்தவனாவதில்லை.

ஆடவரின் அழகை விரிக்கும் புத்தகங்கள் காணப் படுவதில்லை என்பது ஒரு ஆச்சரியமான சம்பவம். பிறகு ஆடவனின் காமவேட்கையை எழுப்பிவிடமட்டும் புத்தகங்கள் எழுதப்படுவானேன்? பெண்களின் அழகை மிகைப்படுத்தும் ஆடவர்கள் அச் சிறப்புகளைப் பயன் படுத்துவதில் சந்தோஷங் கொள்கின்றார்களா? ஒரு பெண் தான் தன்னுடைய வனப்பின் பகுதிகளை ஆடவன் தன் சுகத்திற்கு தன்னிஷ்டப்படி கையாள சம்மதிப்பாளா? புருடன் முன்பு தன் சௌந்திரியத்தை வெளியிட அவள் விரும்புவாளா? ஆமென்று கொண்டாலும் எதற்காக? நல்ல தற்காப்புடைய சகோதரிகள் தங்களை இக்கேள்விகளை கேட்டுக்கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகின்றேன். அச் சகோதரி மனதைப் புண்

படுத்தும் விளம்பரம் இலக்கியம் இவைகளை எதிர்த்துப் போராடுவது என்று கொண்டால் அவைகள் அற்றுப் போம். தீமை செய்வதற்கும் உலகை அழிப்பதற்கும் பெண் வலிமை பெற்றிருப்பதைப் போல சமுதாயத்தை மேம்படுத்த சக்தியும் அவள் பெற்றிருக்கின்றாள். அது அவளிடத்தில் தூங்கிக்கொண்டுள்ள ஒரு சக்தி. இதைப் பெண் அறிந்துவிட்டால் எவ்வளவு நல்லதாகும்!

## ஆடவனின் பிழை

பெண் தான் பலமற்றவளென்ற— கணவன், தகப்பன், மகன் இவர்களால் காக்கப்பட உள்ளவள் என்ற—சிந்தனையை அகற்றிவிட்டால் உலகம் எவ்வளவோ மேம்பட்டு நிற்கும். நாடுகளுக்கிடையே வெறி யுத்தங்கள் நடைபெறும் பொழுது—தம்மையும் பிறரையும் அழிக்கும் பொழுது—பெண்களும் ஆடவர்கள் போன்றல்லாது தம் வழியில் சமூக மேம்பாட்டில் ஈடுபட்டால் எவ்வளவு பயனுள்ளதாகும். இயற்கையாக மனிதனிடத்துள்ள அழிக்கும் போக்கைத் தடுக்க பெண்ணின் வலிவு ஊக்கப்படுவதில்லை. ஆடவர் போரிடும் பொழுது பெண்களும் அழிய நேரும். அந்த அழிவினின்று ஆடவனை மீட்கும் கடமை பெண்ணைச் சார்ந்தது. இந்த விளம்பரம் காற்றுப் போக்கைக் குறிக்கின்றது. வெட்கமும் கூச்சமுமின்று பெண்ணின் பெயரால் இலாபமடைவது அதன் நோக்காகின்றது.

இக்கட்டுரையைப் பார்த்து ஒருவர் அப்பத்திரிக்கையின் பெயரை வெளியிட்டிருந்தால் எவ்வளவோ நல்லதாயிருக்கும் என்று எழுதுகின்றார்.

## மக்களது பொறுப்பு

ஒருவர் என்னையே அத்தகையவைகளைத் தணிக்கை செய்யச் சொல்லுகின்றார். நான் அதைச் செய்யச் சக்தி

யற்றவன். மக்கள் விளம்பரத்தை வெறுப்பதாயின் அதை வெளியிட்ட பத்திரிக்கை சஞ்சிகைகள் இவைகளின் ஆசிரியர்களுக்கு நேரடியாக இது விஷயம் எழுதலாம். தாங்கள் எழுதியும் மாறுதல் ஏற்படவில்லையாயின் அவைகளை வாங்காது விடலாம். கடிதம் எழுதிய சகோதரி ஒரு சஞ்சிகையின் ஆசிரியருக்கு எழுத அவர் தன் தவறை ஏற்று இனி அதைப் பிரசுரிப்பதில்லை என்று உறுதி கொடுத்துள்ளார் என்ற சந்தோஷச் செய்தியையும் இங்கு மகிழ்ச்சியுடன் குறிக்கின்றேன்.



## ஆச்சார்ய விநோபா நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | கீதைப்பேருரைகள் | 2—00 |
| | ,, காலிகோ | 3—00 |
| 2. | கல்விச் சிந்தனைகள் | 3—00 |
| 3. | ஸ்வராஜ்ய சாஸ்திரம் | 1—00 |
| 4 | ஸ்திதப்ரக்ஞ தரிசனம் | 1—50 |
| 5. | ஈசாவாஸ்ய விருத்தி உரை | 1—00 |
| 6. | சாந்தி சேனை | 1—75 |
| 7. | சர்வோதய யாத்திரம் | 0—50 |
| 8. | ராமநாம விமர்சனம் | 0—65 |
| 9. | வாழ்க! மகாத்மா | 0—50 |
| 10. | அதிகாரிகளின் கடமை | 0—40 |
| 11. | ஜெய் ஜெகத் | 0—37 |
| 12. | இம்சைக்கு மருந்து | 0—25 |

## சர்வோதய—பூதான நூல்கள்

| | | |
|---|---|---|
| 13. | விநோபாவின் பூதானப்புரட்சி | 2—50 |
| | ,, காலிக்கோ | 3—50 |
| 14. | உலகம் உவப்ப | 0—50 |
| 15. | விநோபாஜி வரலாற்றுக் காவியம் | 0—50 |
| 16. | சர்வோதய சமுதாய சிந்தனை | 0—50 |
| 17. | மக்களியல் | 0—60 |
| 18. | மூன்று ஞானிகள் | 1—00 |
| 19. | ஆபாச போஸ்டர் சத்தியாக்ரகம் | 0—75 |

தபால் செலவு சுமார் 20 சதம் சேர்க்க.



முழு விலைப்பட்டியலுக்கு:

**சர்வோதய பிரசுராலயம், தஞ்சாவூர்.**

ரெயின்போ பிரிண்டர்ஸ், திருச்சி-8.